# தமிழரசுக்கழகம்
## -ஏன்வந்தது?
## என்ன சொல்கிறது?

கவி. கா. மு. ஷெரீப்

தமிழரசுக்கழகம் பதிப்பகம்
சென்னை-14

# முன்னுரை

இந்தியா ஒரு உபகண்டம். அது ஆசியா கண்டத்தில் உள்ளது. இது பூகோளம் படித்த மாணவர்களுக்கெல்லாம் தெரிந்த விஷயம்.

ஐக்கிய இந்தியா மட்டுமல்ல, ஐக்கிய ஆசியா என்ற பேச்சுக்களைக்கூட அடிக்கடி நாம் கேட்கிறோம். ஐக்கிய ஆசியா என்ன, ஐக்கிய உலகம் உண்டாக வேண்டுமென்பதே மேலோர்களின் விருப்பம். இது வரவேற்க வேண்டியதே.

> "உலகத்திற்கு ஒரே மொழி! உலகத்திற்கு ஒரே கடவுள்! உலகத்திற்கு ஒரே மதம்! உலகத்திற்கு ஒரே தலைவன்! உலக முழுமைக்கும் ஒரே ஆட்சி! உலகத்தின் உடைமையெல்லாம் எல்லா மக்களுக்கும் பொது! பொது மட்டுமல்ல; அனுபவிப்பதிலும் சமம்! எங்கு யார் குடியேறி வாழ்வதென்றாலும் ஆட்சேபனை இல்லை! யார் எங்கு வேண்டுமானாலும் தொழில் செய்யலாம்! எந்தத் தொழில் வேண்டுமானாலும் செய்யலாம்! தடை விதிக்கும் ஆட்சி கிடையாது! அன்புமயமான ஆட்சியே நடக்கும்!"

எண்ணும்போதே எவ்வளவு இன்பமாக இருக்கிறது? இது ஒரே உலகம் என்ற முற்போக்கு அரசியல் தத்துவம். இப்படி—

ஒரே உலகம், ஒரே மொழி, ஒரே கடவுள், ஒரே மதம், ஒரே ஆட்சி. என்றெல்லாம் பேசவேண்டிய மனித

இனம், ஏன் குறுகிய புத்தியுடன் தன் நாடு தன்மொழி என்று பேசுகிறது? கடவுள் மதம் ஆகியவற்றை உலகத்திற்குப் பொதுவாக விட்டுவிட எண்ணும் மனிதர்கள்கூட; தன் நாடு தன் மொழி என்ற பற்றை ஏன் விடமாட்டேன் என்கிறார்கள்?

மனிதன் மேலோருக வாழ ஆசைப்படுகிறான், ஆனால் ஆசாபாசங்கள் விடமாட்டேன் என்கிறது. உலகத்திலே ஒரே மதந்தான் நிலவவேண்டும் என்ற பரந்த நோக்கம் கொண்டு மதத்தை சிருஷ்டித்த தீர்க்கதரிசிகள்கூட, தன் மதமே உலக மதமாக வரவேண்டும் என்றுதான் ஆசைப் பட்டிருக்கிறார்கள். தன் தாய் மொழியில் சொல்லிய— அல்லது கடவுள் அருளிய வேதம்—அதே மொழியில் உலகமெங்கும் பரவவேண்டும் என்ற அவாவில்தான் சிக்குண்டிருக்கிறார்கள். உலகத்திற்கே ஒரு ஆட்சிவேண்டும் என்று பலமான குரல் கொடுக்கும் அரசியல் தலைவர்களும், தாம்தாம் வகுத்த திட்டங்களே உலகமெங்கும் நிலவவேண்டும் என்ற விருப்பத்தைத்தான் வெளியிட்டிருக்கிறார்கள். இந்த விருப்பம் நிறைவேற ஆங்காங்கு ஒவ்வொரு நாட்டிலும் சிஷ்ய கோடிகளைப் பிடித்து, சூழ்ச்சி, அல்லது பரந்த நோக்கத்தில் வேலை செய்தும் வருகிறார்கள்.

உலக மேதைகளே இந்த நிலையில், 'தான்' என்ற அகந்தையையும், தாய் மொழி என்ற பற்றையும், தாய்நாடு என்ற அபிலாஷையையும் களைந்து கொள்ள முடியாதிருக்கையில், பாவம் பாமர மக்களால் எப்படி தன் தாய் மொழிப் பற்றையும், தாய் நாட்டுப் பற்றையும்விட்டு விட முடியும்? ஆகவே, உலக நாடுகள் முழுமையும் ஒவ்வொரு மனிதனுக்கும் அண்டை வீடாகும் வரையில், அல்லது

அண்டை வீடு என்ற நினைவு ஏற்படும்வரையில், அவன வன் தாய் மொழியும், அவனவன் தாய் நாடும் பாதுகாக் கப்படவேண்டும். இந்த அடிப்படையில்தான் இன்று உலகம் சுபீக்ஷம் காணமுடியும்.

தானுக விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை வளராத வரையில், பலாத்காரத்தால் விட்டுக் கொடுக்கச் செய்வ தென்பது, முடிவில் அழிவுப் பாதையிலேதான் கொண்டு போய் சேர்க்கும். சுயேச்சை அந்தஸ்திற்குப்பின் சேர்ந்து வாழும் மனப்பான்மை வளர்வதுதான் உண்மையான நேசத் தின் உறைவிடமாக இருக்கும் சுயேச்சையை மறுத்து, பலாத்காரமாக ஒன்றுபடச்செய்வது, என்ருே ஒரு நாள் பிரிவினைக்கு—அதுவும் மீண்டும் ஒன்று சேர முடியாத பிரிவினைக்கு-வழி வகுப்பதாகும். புருஷன் மனைவி வாழ்க் கையிலிருந்து புவி ஆளும் உரிமை வரையிலும் இந்த நியதி பொருந்தக்கூடியதே.

ரஷ்யாவை ஆண்ட ஜார்மன்னன் வீழ்ச்சிக்கு முக்கிய மாய் உள்ள காரணங்களில் ஒன்று, ரஷ்ய தேச தேசிய இனங்களின்மீது, குறுகிய வட்டாரத்திற்குள் பேசப்படும் மொழியைக் கட்டாயமாய்த் திணித்ததாகும். ஆதலால் தான், ஜார்மன்னன் வீழ்ச்சிக்குப் பிறகு தோன்றிய சர் வாதிகார ஆட்சி, தேசிய இனங்களின் உரிமையைப் பறிக்க அஞ்சிற்று. அதுமட்டிலுமல்ல, தேசிய மொழிகளுக் கும், அந்த மொழிவழியைக்கொண்ட மாகாணங்களுக்கும் சுயநிர்ணய உரிமையை வழங்கி, தனித்தனி மொழிவழி தேசிய இனங்களைக்கொண்ட சுதந்திர குடியாசு நாடுகள் என்ற அமைப்பினை ஒப்புக்கொண்டு தேசிய இனநாடுகளின் 'பாதுகாவலன்' என்ற முறையிலே ரஷ்ய நாட்டின் மத்திய

ஆட்சி நிறுவப்பட்டுமிருக்கிறது. ரஷ்ய மத்திய பாராளும் மன்றத்தில் ஒவ்வொரு ராஜ்ய பிரதிநிதியும், தத்தமது நாட்டு மொழியிலேயே பேச வசதியும் செய்து கொடுக்கப் பட்டிருக்கிறது. இன்றைய ரஷ்ய ஆட்சிக்கு ஜனநாயகம் என்ற சொல்லில் நம்பிக்கை கிடையாது என்பது உலக றிந்த விஷயம். ஆனால், தேசிய இனங்களின் உரிமையைப் பறிப்பது, சர்வாதிகாரத்திலும் கொடிய செயல் என்பதை சர்வாதிகார நாடான ரஷ்யாகூட நன்கு உணர்ந்திருக்கிறது. உலக அரசியல் புரிந்தவர்களால் நடத்தப்படும் இந்திய பாராளும் மன்றத்திற்கும், அதைச் சூழ்ந்துள்ள தேசியப் போர்வையாளர்களுக்கும் இதை உணரும் எண்ணமோ, அல்லது அவகாசமோ இல்லை என்றுதான் நாம் எண்ண வேண்டியதிருக்கிறது.

> "ஆத்மாவிற்கு சுதந்திரம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியமானது தாய் நாட்டிற்குச் சுதந்திரம். தாய் நாட்டிற்குச் சுதந்திரம் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியம் தாய் மொழிக்கு சுதந்திரம்."

இது இந்திய விடுதலைக்கு முன்பு தேசிய வீரர்கள் தேசத் தலைவர்கள் முழங்கிய சொற்களின் கருத்து.

ஆத்மா சுதந்திரத்துடன் வாழவேண்டுமானால்—அந்தச் சுதந்திரத்தில் சுபீக்ஷமும் நிலவ—உடம்பின் ஒவ்வொரு நரம்பும், தசையும், என்பும், ஏனைய உறுப்புக்களும் ஆரோக்கியத்துடன் இருக்க வேண்டும். சுதந்திரமாக வாழ்வதைத் தவிர, உடம்பில் உள்ள ஒரு சிறு நரம்பின்

மீறுகூட ஆத்மா, தன் ஆதிக்கத்தைச் செலுத்தக் கூடாது! இந்த நியதி மீறப்படுமானால் ஆதிக்கம் செலுத்தப் அவயவங்கள் மட்டுமல்ல. உடல்—உடல் மட்டுமல்ல—பட்ட ஆத்மாவும் சேர்ந்து அழிந்து ஒழிவது திண்ணம். இதே கதைதான் தேசத்திற்கும் தேசீய இனங்களுக்கும்.

பல மொழிகளைக் கொண்ட ஒரு பரந்த நாட்டில் வாழும் தேசிய இனங்கள் அனைத்திற்கும் சுதந்திரம்வழங்கி, அவைகள் தானாக இயங்கும்போது,—அந்த இயக்கங்களின் ஜீவனாக மத்திய ஆட்சி இருப்பதுதான் தேசிய இனங்களுக்கும் அந்த தேசீய இனங்களின் நாயகமாக விளங்கும் மத்திய ஆட்சிக்கும் நல்லது. எதாவது ஒரு தேசிய இனத்தின் சுதந்திரம் பறிக்கப்பட்டாலும், அது தேசத்திற்கே ஆபத்தைத் தேடி அழைப்பது என்றுதான் அர்த்தம். ஆகவேதான், உலக நாடுகள் தேசிய இனங்களின் சுதந்திரத்தை அங்கீகரிக்கின்றன. இதை உணர்ந்தேதான் தேசியத் தந்தை மகாத்மா, இந்தியாவிற்கு தேசிய இன சுதந்திரத்தை வலியுறுத்தினார். இந்திய தேசியக் காங்கிரசின் முக்கியக் கொள்கையாக —ஏன், முதற்கொள்கையாகவும்கூட—மொழிவழி ராஜ்ய அமைப்பை வைத்தார். அவர் ஆத்மா பறிக்கப்பட்ட நாள் வரையிலும் மொழிவழிப் பிரிவினையை உடனடியாகச் செய்யும்படி இந்திய ஆட்சிக்கு விடாது எடுத்துக்கூறி வந்தார். பதவிக்கு முன்பு மகாத்மாவின் இந்த வாக்கியத்தை ஒப்புக்கொண்ட காங்கிரஸ் தலைவர்கள், பதவியில் நிலைத்ததும் “அது பத்தாம் பசலிக் கொள்கை” என்று கூறிவிட்டார்கள். ஆனால், தேர்தல் பிரகடனத்தில் மட்டும் சேர்க்காமல் இருக்கவில்லை. இன்றும்கூட சட்டரீதியாக மறுக்க

யல் தனிப்பட்ட முறையிலேயே மொழிவழி ஆட்சியை மறுத்து வெறுத்துப் பேசுகிறார்கள். யார் வெறுத்தாலும், யார் ஆதரித்தாலும் அதற்காக வெல்லாம் சூரியன் தன் கடமையை நிறுத்தவோ செய்யவோ தொடங்குவதில்லை. இயற்கைப்படி அது இயங்குகிறது. மொழிவழி நாடுகள் அமைவதும் அப்படியே! இதை நினைவில் கொண்டுதான் தமிழரசுக் கழகம் தன் பணியில் ஈடுபட்டுள்ளது. தமிழரசுக் கழகம் இதுவரை செய்துள்ள பணிகளை—அதன் கொள்கைகளை—தொகுத்து வெளியிடுவது அவசியம் எனக் கருதியே இந்த நூலை நான் எழுதலானேன். இதில் தமிழரசுக் கழகம் துவங்கிய 1947 முதல் 1953 முடிய தமிழரசுக் கழகத்தின் நடவடிக்கைகள் தொகுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. சித்தூர் போராட்டத்தில் கலந்துகொண்ட தொண்டர்களின் ஊர் பெயர் ஆகிய விவரங்கள் அனைத்தும் சேர்க்க வேண்டும் என எண்ணினேன். பக்கம் அதிகரிப்பதை எண்ணி விட்டுவிட்டேன். முடியுமானால் அடுத்த பதிப்பில் சேர்க்கிறேன். நிற்க, 1953-ம் ஆண்டிற்குப் பிறகுள்ள நிகழ்ச்சிகளையும் தமிழரசுக் கழகத்தின் சட்டதிட்டங்களையும் அடுத்த பதிப்பில்தான் சேர்க்கமுடியும். இது ஒரு அவசர வெளியீடு. ஆகையினால், அச்சுப் பிழைகள் அதிகமாகிவிட்டன. நேயர்கள் பொறுத்தருளவேண்டுகிறேன். அத்துடன் இந்த நூலை முன்னேற்டமாக ஏற்று அடுத்த பதிப்பு வெளிவர உதவக்கோருகிறேன்.

சென்னை
31-1-54

தங்களின்
கவி. கா. மு. ஷெரிப்

# தமிழரசுக்கழகம் -ஏன்வந்தது? — என்ன சொல்கிறது?

வளர்ந்துவரும் தமிழரசு இயக்கத்தைக் கண்டு கருஞ் சட்டையினர் கூறுகின்றனர், "இது அக்ரகாரத்தின் அடி வருடிக் கட்சி இதை நம்பாதீர்கமௗன்று" தி. மு. க.கள், "தமிழரசுக் கழகம் வடநாட்டாரின் வால் பிடிக்குங் கட்சி, என்கின்றனர். கம்யூனிஸ்டுகளோ "இது காங்கிரஸின் மறுபதி"ப்பென்று கூறுகிறார்கள். சோஷிலிஸ்டுகள் சொன் னார்கள் "தமிழரசுக்கழகம் குறுகிய புத்தியுடைய"தென்று. தேசியத்தார்களில்சிலரும் தமிழரசுக்கழகத்தின் திட்டத்தை, "தென்னாட்டு பாகிஸ்தான்" என்று கூறத் தயங்கியதில்லை. இத்தனை எதிர்ப்புக்களையும் தாண்டி, ஆறாண்டுக்குள் தமி ழரசுக் கழகம் தழைத்தோங்கி வளர்ந்திருக்கிறதென்றால், மாற்றுக் கட்சியினர் மருளாமல் என்ன செய்வார்கள்? ஆகவே, மாற்றார்கள் மீது சீற்றம் கொள்ளாமல், வளர்ந்து வரும் நமதியக்கத்தில் பணியாற்றிவரும் இளை

ஞர்களுக்கு, தமிழரசுக் கழகம் ஏன் வந்தது? என்ன சொல்கிறது? என்பதை நாம் எடுத்துக் கூறவேண்டியது அவசியமாகிறது. அப்படிச் செய்வதினுல் நமது இளை ஞர்கள் கொள்கையைப் புரிந்து பணியாற்ற முடியும். அத் துடன் மாற்றுக் கட்சியாளர்களின் மனதை மாற்றும் மருந்தாகவும் இந்த விளக்கம் பயன்படுமல்லவா?

## அவர்கள் சொல்வது சரியா?

நாம் நமது கொள்கையை விளக்கப் புகு முன்பு, நம் மைப்பற்றி தி. க., தி. மு. க., கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டு, காங்கிரஸ் கட்சி ஆகியவை கூறும் குற்றச்சாட்டுகள் உண் மையானவைதாஞ? என்பதை ஆராய்ந்து அறிந்து கொள் வது நல்லது. முதலில் தி. க., தி. மு. க.வை எடுத்துக் கொள்வோம். இந்த இரு கட்சிகளும் ஒரே அச்சில் வார்த்த பொம்மைகள். கல்யாணத்தால் மாற்றமே தவிர கருத்தில் அவர்களுக்குள் மாற்றமில்லை. அவை அரசியல் கட்சிக ளல்ல என்று அவர்களே சொல்லிக் கொள்கிருர்கள். அர சியல் கட்சியாக இல்லாவிட்டாலும், அரசியல் புரிந்தவர் களால் நடத்தப்படும் கட்சியா என்ருல் அதுவும் கிடை யாது. மண்டிக்கடைக்காரரான ஈ. வெ. ரா.வை மக்கள் மன்றங்களிலே பேசும் பேச்சாளராக ஆக்கிய பெருமை காங்கிரஸ் கட்சிக்குத்தான் உரியது. காங்கிரஸ், வெள்ளையன் எதிர்ப்பு இயக்கமாக இருந்த காலத்திலேதான் ஈ. வெ. ரா. அதில் இருந்தார். பதவியேற்று நாடாளும் கட்சியாக காங் கிரஸ் மாறுவதற்கு வெகு நாட்களுக்கு முன்பாகவே அவர் அக்கட்சியை விட்டுவெளியேறி விட்டார். ஆகவே ஆளும் கட்சியைத் திட்டவும் (ஏதாவதொரு) நிறவெறி பேசவும் தெரிந்தவரே தவிர மற்றபடி ஈ. வெ. ரா., திட்டங்

கள் தெரிந்த தலைவரல்ல. அவர் படை முகாமிலே பயின்ற வர்கள்தானே தி. மு. க.கள்? எனவே, திட்டக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், திட்டங்கள் தெரிந்தவர்களல்ல. சிங்கமில்லாக் காட்டிலே நரி ராஜாவாக இருந்ததுபோல் வாழ்ந்த இந்தக் கூட்டத் தார்களுக்கு, தமிழரசுக் கழகத்தாரின் பிரச்சாரத்தால் வரு வாய் வரண்டுவிட்டது. பிழைப்புக்கு வழியற்றுப் போன தால் தமிழரசுக் கழகத்தைத் திட்டுகிறார்கள் என்ற அள வில்அவர்களின் பேச்சை நாம் தள்ளிவிட வேண்டும். ஆனால், அந்த முகாமிலே உணர்ச்சி மிக்க இளைஞர்கள் பலர் இருப்பதால் அவர்கள் சிந்தித்துத் தெளிவு பெறட் டும் என்ற நோக்குடன், தி. க., தி. மு. க.களின் வாதங் களுக்கு நாம் பதில் சொல்கிறோம்.

## வாதம் உண்மையாகுமா?

வடநாட்டாரின் வால் பிடிக்கிகளென்று, வெறும் வாதத்திற்காகக் கூறிவிடுவது உண்மையாகாது. பார்ப்பனர் களின் நண்பன் என்று பட்டம் சூட்டிக்கொள்வதனாலேயே ஒருவன் பார்ப்பனர்களின் நண்பனாகிவிடமாட்டான். அதே போல, பார்ப்பனர்களின் எதிரியென்று தன்னைத்தானே கூறிக்கொள்வதினாலேயே ஒருவன் பார்ப்பன விரோதியாகி விடவும் மாட்டான். வடநாட்டு எதிர்ப்பும் ஆதரிப்பும் இப் படிப்பட்டதுதான். தனிப்பட்ட முறையில் தி.க., தி.மு.க. தலைவர்களுக்கு இருக்கும் தொடர்பளவுகூட, வடவரிட மும் பார்ப்பனர்களிடமும் தமிழரசுக் கழகத்தினர் தொடர்பு கொண்டிருக்கவில்லை. தி. க., தி. மு. க.களைவிட தமிழரசுக் கழகத்தினருக்கு மொழிப்பற்றும் நாட்டுப் பற்றும் அதிகம் உண்டு. ஆனால், நான் என் வீட்டிற்கு

எஜமானனாக வேண்டும் என்பதற்காக, அடுத்த வீட்டுக்காரனுடன் சண்டை போட்டுக்கொண்டிருக்க வேண்டும் என்பதில்லை. தமிழ் நாட்டை தமிழர்கள் தமிழில்ஆளவேண்டும் என்பது தமிழரசுக் கழகத்தாரின் கொள்கை. அதற்காக வடநாட்டுறவை ஏன் வெட்டிக் கொள்ளவேண்டும்? எனக் கேட்கின்றனர் தமிழரசுக் கழகவாதிகள். இந்தக் கேள்விக்கு எந்தத் திராவிடத் திருமேனியும் இன்றளவும் பதில் சொன்னதில்லை. ஆனல், உறவுக்கும், உரிமைக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளின் விவரம் புரியாமல் நம்மை (தமிழரசுக் கழகத்தினரை) வடவரின் தாஸர்கள் எனக் கூறிக் கிண்டல் செய்கிறார்கள் தி. க., தி.மு. க.கள் !

## ஐக்கிய விரோதிகளா ?

இப்படிச் சொல்லி வட நாட்டிலிருந்து துண்டித்துக் கொண்டு வாழ்வோமெனக் குரலெழுப்பும் இந்த தி. க., தி. மு. க.கள், ஐக்கிய அமைப்பிற்கு உண்மை விரோதிகளா என்று பார்த்தால் உண்மையில் அவர்கள் அப்படிப்பட்டவர்களல்ல என்பது நன்கு விளங்கும். தி. மு. க.களும் கூட்டாட்சி முறையை ஒப்புக் கொள்கிறார்கள் ! அந்தக் கூட்டாட்சிக்கு ஒரு மத்திய ஆட்சி வேண்டும் என்பதையும் வரவேற்கிறார்கள். அந்த மத்திய ஆட்சிக்கு பொது மொழியாக ஒரு அன்னிய (ஆங்கில) மொழி இருப்பதை தாங்கள் தடுக்கவில்லை என்கிறார்கள்! இத்தனையும் திராவிடக் கூட்டாட்சியில் இருக்கலாமென்றால், இதே அடிப்படையில் இந்திய மத்திய ஆட்சியின்கீழ் தமிழகம் இருக்கட்டுமே என்று தமிழரசுக் கழகத்தார் கேட்கின்றனர். அது எப்படித் தப்பாகும் ?

## சின்னதும் பெரிதும்!

திராவிடத்தார்கள் கோரும் திராவிடக் கூட்டாட்சி சின்னது. தமிழரசுக் கழகத்தார் சொல்லும் இந்தியக் கூட்டாச்சி பெரியது. இதைத் தவிர இரண்டிற்கும் உள்ள வித்தியாசம் ஒன்றுமில்லை. இரண்டும் குடியரசுக் கூட்டாட்சிகள் தான்.

கேரள-கன்னட-ஆந்திர-தமிழகம் என்ற நான்கு மொழிவழி நாடுகளைக்கொண்டது திராவிடக்குடியரசு, அல்லது கூட்டாச்சி. அதேபோல, 18 மொழிவழி நாடுகளைக் கொண்டது இந்தியக்குடியரசு, அல்லது கூட்டாட்சி, எல்லை விரிவடைவதால் கொள்கை தப்பாகி விடுமா? தி. மு. க.வாகிலும் திராவிடக் கூட்டாட்சியில் மாகாணங்களின் நிலை என்ன என்பதை இன்றளவும் கூறவில்லை. தமிழரசுக் கழகம், மத்திய ஆட்சிக்கும் மாகாண ஆட்சிகளுக்கும் அதிகாரங்கள் இன்ன இன்ன வகையில் இருக்க வேண்டும் என திட்டவட்டமாகக் கூறுகிறது. பலம் பொருந்திய மத்திய ஆட்சி என்பதை நீக்கி, அதிகாரங்களை எல்லாம் மாகாண சர்க்காருக்கு மாற்றிக் கொடுத்துவிட வேண்டும் என்கிறது தமிழரசுக் கழகம். வெளிநாட்டுறவு, போக்குவரத்து, பாதுகாப்பு, சுங்கம் ஆகியவைகள் தான் மத்திய ஆட்சியின் ஆதிக்கத்திற்குட்பட்டவை. மற்ற அதிகாரங்களெல்லாம் மாகாண சர்க்காருக்கே வேண்டும் என்கிறது தமிழரசுக் கழகம். இது கூட்டாட்சி நாடுகளுக்குள்ள பொது இலக்கணம். அமெரிக்கா, ரஷ்யா போன்ற நாடுகளெல்லாம் இந்த அடிப்படையில்தான் இயங்குகின்றன. நாளைக்கு திராவிட கூட்டாட்சி நாடு வந்தாலும் இதே அடிப்படையில்தான்

இயங்க வேண்டும். அப்படியிருக்கையில்—மத்தியத்தின் அதிகாரங்கள் மாகாணங்களுக்கு மாற்றப்பட்டு, தாய்மொழி ஆட்சியைக்கொண்ட மாகாணங்களாக—ஒன்றையொன்று சுரண்டுவது என்ற தன்மையற்ற—ஆட்சி நடக்கும்போது, அது நான்கு மொழிவழி ராஜ்யங்களை உள்ளடக்கிய திராவிடக் கூட்டாட்சியாக இருந்தாலென்ன? 18 மொழிவழி நாடுகளைக்கொண்ட இந்திய கூட்டாட்சியாக இருந்தாலென்ன? நான்கு பேர் ஒருவரை ஒருவர் சுரண்டாமல் வாழலாமென்றால், அதே சுரண்டலற்ற தன்மையில் 18 பேர்களைக்கொண்ட நாடாக ஏன் அது இயங்கக்கூடாது? கூட்டுக் களவாணித்தனத்திற்கு இடமில்லை என்றபின், கூடிவாழ்வது எத்தனை பேரானாலென்ன? இந்த அடிப்படை தத்துவத்தைக்கூடப் புரிந்துகொள்ள முடியாத தி. க., தி. மு. க கள், தமிழரசுக் கழகத்தாரை வடவர் தாஸர்களென சொல்லுவது கொள்கைக்கு பதில் சொல்ல முடியாத்தனத்தால் எழும் வாதமே தவிர உண்மையல்ல. வடவர்களும் சேர்ந்த இந்தியக் கூட்டாச்சியில் இருக்க விரும்புவதால் தமிழரசுக் கழகத்தினர் வடவர் தாஸரானால், தமிழகத்திற்கு வடபாலுள்ள ஆந்திரர்களுடன் சேர்ந்து வாழ எண்ணும் திராவிடத்தார்களும் வடவர் தாஸர்களாகத்தான் இருக்க முடியும்.

## கலாச்சார கூட்டரசு

மொழிவழி குடியரசு அமைப்பை ஒப்புக்கொள்ளும் திராவிடத்தார்கள், அதை கேரள, கன்னட, ஆந்திர, தமிழகமென்ற நான்கு மொழிவழி குடியரசுநாடுகளைக்கொண்ட திராவிடக் கூட்டாட்சியாக அமைக்க ஆசைப்படுகிறார்கள்.

இதற்குள்ள காரணத்தை விளக்கும்போது, "கேரள, கன்னட, ஆந்திர தமிழகம் என்ற நான்கும் ஒரே கலாச்சாரத்தைக் கொண்ட நாடு. ஆகையினால் அவை ஒன்றுபட்ட தனிக்கூட்டாட்சி நடத்த வேண்டும்" என்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால், இது தமிழக திராவிடர்களின் கூற்றே தவிர ஆந்திர, கன்னட, மலையாலத்தார்கள் இப்படிக் கூறுவதில்லை. சொல்லப்போனால், அவர்கள் தங்களை திராவிடர்கள் என்றே சொல்லிக் கொள்வதில்லை! அப்படிச் சொல்லிக்கொள்ள அவர்கள் வெட்கப்படுகிறார்கள். அதுமட்டுமல்ல இந்த நான்கு இனங்களும், தன்னினம்தவிர மற்ற மூன்று இனங்களையும் கலாச்சாரத்தில் மட்டமானவ என்று சொல்லவும் தயங்குவதேயில்லை. அது இன்னும் உடை, உணவு. மாழி, மொழியின் லிபி போன்ற எல்லாவகையிலுமே இந்த நான்கு இனங்களும் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருகின்றன. இலக்கியங்களிலும் அப்படியே. தமிழ்த் திராவிடர்கள்வேண்டுமானால், "தமிழில் இருந்துதான் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மூன்று மொழிகளும் பிறந்தன" என்று கூறிக்கொண்டிருக்கலாம். அந்த மூன்று இனத்தாரில் ஒரே ஒரு பயித்தியக்காரன்கூட இதை ஒப்புக்கொள்ளத் தயாரிவில்லை. "ஒரு நூறு வருடங்களாக நான்கு, இனத்தவர்களும், ஒரே மாகாணத்தவர்களாக வாழ்ந்து விட்டோம், கூடியவர்கள் ஏன் பிரியவேண்டும்? ஒன்றாகவே இருக்கலாம்" என்ற ஒரு காரணம் வேண்டுமானால் ஓரளவிற்குச் சரியாக இருக்கலாம். ஆனால், இதே அடிப்படையில் பார்க்கும்போது, இந்தியர்கள் அனைவருமே ஒரு நூறுண்டாக ஒரே இந்தியர் என்ற அடிப்படையில்தானே வாழ்ந்திருக்கிறோம்? மாறுபட்ட

மொழியினர், மாறுபட்ட பண்பாடுடையவர் ஆகிய நான்கு பேர் புதிதாக தனியாட்சி நிறுவிவாழலாம் என்று சொல்லும்போது, அதே அடிப்படையில், பதினெட்டு இனத்தவர்கள் சுரண்டலற்ற சுதந்திர குடியாசுகளை நிறுவி வாழ்வதிலே என்ன் தப்பிருக்கிறது ?

## மொழி ஒற்றுமை

"திராவிட மொழிகளான ஆந்திர, கன்னட, கேரள, தமிழ்நான்கும் ஓரினச்சார்புடையதாக இருக்கிறது. ஆகவே அந்த அடிப்படையில் திராவிடக் கூட்டாட்சி நிறுவலாம்" என்கிறார்கள். இதுவும் தவறு. நான்கு மொழிகளும் வெறும் லிபி ஒற்றுமைகொண்டதுகூட அல்ல! ஐரோப்பிய மொழிக்கூட்டம் லிபியால் ஒன்றுபட்டிருக்கின்றன. வடநாட்டு மொழிகளும் ஏறக்குறை எல்லாமே லிபியால் ஒன்றுபட்டிருக்கின்றன. ஆனல், திராவிட மொழிகள் என்று சொல்லுபவை அப்படியில்லையே? இன்னும் தமிழர்களைத் தவிர மற்ற மூன்று இனத்தவர்களும் சமஸ்கிருதப் பிரியர்களாகவும் பிராமண தாஸர்களாகவும் இருக்கிறார்களே. வடநாட்டையும் வெறுப்பதில்லையே. இந்தியை எதிர்ப்பதில்லையே. தமிழ்த் திராவிடர்களோ, சமஸ்கிருதவிரோதிகள். பிராமண துவேஷிகள். வட நாட்டை வெறுப்பவர்கள். இந்திக்கு தார் பூசுபவர்கள். ஆந்திரர்கள் தமிழுக்கல்லவா தார் பூசுகிறார்கள்? இந்த நிலையில் மொழி ஒற்றுமைக் கூட்டாட்சி நாடு எப்படி மலரும்?

## இருக்கிறதா ?

ஐரோப்பாக் கண்டத்தினர், ஏறக்குறைய எல்லோரும் லிபியால், கலாச்சாரத்தால், பண்பாட்டால், மதத்தால்—மொழி உச்சரிப்பிலும், லிபிஇயக்கத்திலும் தவிர-மற்றபடி

எல்லாவற்ருலும் ஒன்றுபட்ட தோற்றம் கொண்டவர்கள் தானே ? இருக்கிறதா ஐரோப்பாக் கண்டம் ஒரே நாடாக ? பிரஞ்சுக் காரனும் இங்கிலாந்து நாட்டானும் நிறத்தால், உடையால், மதத்தால், பண்பாட்டால் பழக்க வழக்கத் தால், பேச்சால், எழுத்தால், நம் போன்ருர்களுக்கு ஒரே மாதரியாகத்தனே தெரிகிருர்கள் ? அவர்கள் நாடு ஒரு கூட் டாட்சித் தொகுப்பாக இருக்கவில்லையே ? இதே போலத் தானே ஜெர்மானியனும் மற்றவனும் ? நிலப்பரப்பால்கூட பிரஞ்சும் ஜெர்மனியும் துண்டு பட்ட நாடுகளில்லை. இந்த நிலையில், உன் மொழி வேறு என் மொழி வேறு என்று தனி தனியாகப் பிரிந்தல்லவா வாழ்கிருர்கள் ? லிபியால், மதத்தால் நிறத்தால், கலாச்சாரத்தால், உண வால், உடையாலெல்லாம் ஒன்று பட்டுத் தோன்றும் ஐரோப்பியர், வெறும் மொழி உச்சரிப்புப்பேதத்தைமட்டும் கொண்டு பிரிந்து வாழ்கிருர்கள் என்ருல், இங்கே மட்டும் மொழியால், லிபியால், பண்பாட்டால் காலாச்சாரத்தால், உடையால், உணவால், மதப்பெரியோர்களை மதிக்கும் தன் மையால், மொழிக் கூட்டுறவால், ஒன்றுக்கொன்று மாறு பட்ட கருத்துக்களைக் கொண்ட ஆந்திர, கன்னட, மலை யாள, தமிழகத்தார்கள் ஒன்றுபட்ட தனியாட்சி நடத்து வது முடியுமா ? உலகில் உள்ள சுதந்தர நாடுகளில் இப்படி ஒரு நாடு உண்டு என்று எடுத்துக்காட்ட இயலுமா ? சில லட்சம் மக்களைக்கொண்ட ஒரு இனத்தினர் தனியாட்சி நடத்துவது உண்டு. ஆனல், பல மொழிக்காரர்களை ஒரே கலாச்சாரத்தினர் என்று கூறி, ஆட்சி நடத்த முனையும் அர்ப்புதம் எங்கேயும் நடந்தது கிடையாது! மத அடிப்படை யில் அமைந்துள்ள நாடுகளில்கூட அந்த நிலை முறிவு கண்டு விட்டது !

## கூட்டாச்சி ஏன்?

ஐரோப்பாக் கண்டத்தின் நாடுகளை நாம் உதாரணத்திற்கு எடுத்துக் காட்டியதும், அவைகள் ஓரே கூட்டாச்சி நாடாக இல்லையே தமிழரசுக் கழகம் மட்டும் ஏன் கூட்டாச்சியை விரும்புகிறது? என்றுதுண்டித்து வாழவிரும்பும் திராவிடர்கள் கேட்கலாம். கேட்கவும் செய்தார்கள் சில நாட்களுக்கு முன்புவரை. இப்பொழுது அதை அவர்களில் ஒரு சாரார் விட்டுவிட்டனர். ஏனென்றால், அவர்களும் திராவிடக் கூட்டாட்சி என்று சொல்ல ஆரம்பித்திருப்பதினுல்தான். ஐரோப்பாக் கண்டத்தில், கூட்டாட்சி முறையில்லாததினுல்தான் சின்ன மீன் பெரிய மீனுக்கு இறை என்பதுபோல, சின்ன நாடுகளை அண்டையிலுள்ள பெரிய நாடு ஆக்ரமிப்பதும், அந்தச் சின்ன நாடு, அப்பாலுள்ள பேரரசைத் துணைக் கழைப்பதும், சண்டை மூளுவதும், பிறகு அது உலக யுத்தமாக மாறுவது என்ற நிலை இருந்து வருகிறது. இந்த அவல நிலையை போக்க எண்ணிய அறிஞர்கள்தான், கூட்டாட்சி முறையை விரும்பினர். அதை அமுல் நடத்த முனைந்தனர். பல நாடுகளிலே இன்று நடந்தும்வருகின்றன. அப்படி நடக்கும் தேசங்கள் பலமுடைய தேசங்களாகவும் திகழ்கின்றன. ரஷ்யா, அமெரிக்கா, சைனு போன்ற பெரிய தேசங்களை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். இந்த நாடுகளுக்குள் இனமோதல், அதாவது ஒரு பகுதி மக்கள் மறுபகுதி மக்களை ஆதிக்கம் வகிக்க எண்ணும் மோதல்கள் எழுவதில்லை. இந்தியா இந்தநிலையில்அமையாமல் பாகிஸ்தான்-பாரதமாக இரண்டு பட்டதினுல்தான், ஆதிக்க நரிகள் ஆசை வார்த்தைகூறி, உள்ளேபுகுந்து பகைப்புலன்களை வளர்க்கின்றன.

எஞ்சிய இந்தியாவும் வடக்கு தெற்கென்று கூறு போடப் படுமானால், பரத கண்டம் போராட்ட பூமியாக மாறுவதை யாராலும் தடுக்க முடியாது! ஐரோப்பா கண்டத்தின் சரித் திரத்தைப் படித்தவர்கட்குத்தெரியும். அந்தக் கண்டம் ஒரு முப்பதாண்டுக் காலம்கூட போரின்றி வாழ்ந்தது கிடை யாது! இந்த விபத்தை விரும்பாத காரணத்தால்தான் நாம் மொழிவழிக் கூட்டாட்சி கோருகிறோம். தி.மு.க.வும் மொழிவழி ஆட்சியை ஒப்புக்கொள்கிறது. ஆனால், புரிந்தோ புரியாமலோ திராவிடக் கலாச்சாரத்தின் அடிப் படையில் அந்த மொழிக் கூட்டாட்சி அமையவேண்டும் என்று தி.மு.க. சொல்லுகிறது. இதையும், ஆரிய திராவிட நிறவெறியையும் அவர்கள் விட்டுவிட தயாரில்லை. வடக்கு தெற்கென்ற வாதத்தைவிடக்கொடியது ஆரிய திராவிட நிற வெறிவாதம். ஆனால், இதிலும் அவர்கட்கு தெளிந்த அறிவு இல்லை. அதனால்தான் நாட்டு மக்கள் அவர்கட்கு அரசியல் ஞானமில்லை என்கின்றனர்.

## பார்ப்பன எதிர்ப்பும் அப்படியே!

திராவிடத்தார்கள் பார்ப்பன எதிப்பாளர்கள் என்று தங்களைக் கூறிக்கோள்வதும் தமிழரசுக் கழக வாதிகளை பார்ப்பன ஆதரிப்பாளர்கள் என்று சொல்லுவதும் இதைப்போன்று வரட்டுவாதமே.

ஜாதி வெறியை தமிழரசுக் கழக வாதிகள் மட்டு மல்ல; உலகத்திலுள்ள எல்லா முற்போக்கு வாதிகளும் எதிர்க்கவே செய்கிறார்கள். ஆனால், குறிப்பிட்ட ஒரு ஜாதியினரை மட்டும் திட்டுவதால் ஜாதி ஒழிந்து விடும் என்பதை தமிழரசுக் கழக வாதிகள் நம்பத் தயா ரில்லை. பார்ப்பான்தான் மூடத்தனத்தை வளர்த்தான்

என்றால், அதே மூடத்தனத்திற்கு அவனும் பலியாகி இருக்கிறான் என்பதை யாரும் மறுக்க முடியாது.

கல்லையும் செம்பையும் திராவிடர்கள்தான் வணங்குகிறார்கள் என்பதில்லை. பார்ப்பனரும் வணங்கத்தான் செய்கிறார்கள். செத்தவனுக்கு திவசம் திராவிடர்கள்தான் கொடுக்கிறார்கள் என்பதில்லை, பிராமணர்களும் தவறாது கொடுக்கிறார்கள். பஞ்சாங்கம் பிறருக்குப் பார்த்துச் சொல்வதோடு மட்டுமல்ல; தாங்களும் பார்த்து அதன் படி நடக்கிறார்கள் பார்ப்பனர்கள். கல்யாணத்தில் வேத மந்திரம் என்பது திராவிடர்கள் வீட்டுக் கல்யாணத்தில் தான் என்பதில்லை. பிராமணர் வீட்டுக் கல்யாணத்திலும் உண்டு. சமஸ்கிருதம் திராவிடர்களுக்கு மட்டுந்தான் புரியாதென்பதில்லை, பார்ப்பனர்களிலும் நூற்றுக்குத் தொண்ணூற்றி ஐந்து பேர்களுக்குத் தெரியாது. ஜாதிப் பிரிவினை திராவிடர்களிடத்தில் மட்டுமல்ல, பார்ப்பனர்களுக்குள்ளேயும் உண்டு. எனவே, ஜாதி வெறியும் மூடத்தனமும் திராவிடர்களை விட்டு விலகினால் மட்டும் போதாது. நம் நாட்டிலே—ஏன் உலகத்திலே—எல்லோரிடமிருந்தும் நீங்கியாகவேண்டும் என்கிறது தமிழரசுக் கழகம். பார்ப்னனால்தான் மூடப்பழக்கமும் ஜாதிப்பிரிவினையும் உண்டாயிற்று; எனவே அவனை முதலில் ஒழிக்க வேண்டும் என்கின்றனர் திராவிடத்தார்கள். இது மா பெருந் தவறு.

காலரா பரவியிருக்கும்போது, காலராவை இவன்தான் கொண்டுவந்தான், ஆகவே, இவனைக்கொல்லவேண்டும் என்பது நோய்தீர்க்கும் டாக்டரின் கூற்றாகக்கொள்ளமுடியாது. ஆளின்மேல் ஏற்பட்ட தனிப்பட்ட ஆத்திரம் என்று

தான் கூறமுடியும். ஏனென்றால், பரவிவிட்ட காலராவை, கொண்டு வந்தவனைக் கொல்வதால் மட்டும் போக்கிவிட முடியாது. அவன் ஊரை அழிக்க வேண்டும் என்று கால ராவைக் கொண்டு வரவில்லை. அறியாமையினால் கொண்டு வந்துவிட்டான். எனவே, காலராவைக் கொண்டு வந்த வனையும் மற்றவர்களுடன் சேர்த்து டாக்டர் குணப்படுத்தி யாகவேண்டும். அப்போழுதுதான் அவர் மனித சமுதாயத் திற்கு உண்மையான தொண்டுசெய்தவராவார். இதைப்போ லவே, சமுதாயத்தில் புகுந்துவிட்ட ஜாதி என்ற கோடிய நோயையும் தீர்க்கவேண்டும் என்கிறது தமிழரசுக் கழகம். இல்லை, காலரா இவனால்தான் பரவியது; எனவே இவனைக் கொல்லவேண்டும் என்பதுபோல, பிராமணர்களை ஒழிக்க வேண்டும் என்கிறது திராவிடக் கழகம்! தமிழரசுக் கழ கமோ, பழமைக்கு எல்லோரும் அடிமைகள்தான். பிரா மணர் பிராமணரல்லாதார் என்ற பாகுபாட்டிற்கு இதிலே இடமில்லை. பிராமணர்களும் நம் அனுதாபத்திற்குரியவர் களே. தமிழரசுக் கழகம் அவர்களையும் மூடப்பழக்கத்திலி ருந்து காப்பாற்றுவோம் என்கிறது. கிணற்றில் விழுந்த பல குழந்தைகளில், நம் குழந்தையை மட்டும் காப்பாற்றுவோம் என்ற எண்ணம்படைத்தவர்கள் வேண்டுமானால் ஆரியம்— திராவிடம் பேசலாம். தமிழரசுக் கழகவாதிகளை ஆரிய அடிவருடிகள் என்றும் கூறலாம். ஆனால், உலகம் ஒப்புக் கொள்ளாது; அப்படிக் கூறாது.

## மற்றொரு வகை பிரசாரம்

தி. க., தி. மு. க., பிரசாரங்களிலே இன்னொரு வகை, "சொன்னோம்—சொல்கிறார்கள்" என்பது. அதா

வது, திராவிடத்தார்கள் "தமிழ் நாடு தமிழருக்கே" என்று தமிழரசுக் கழகம் தோன்றுவதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன்பே சொல்லி, அது உதவாவது என்று தூக்கி எறிந்து விட்டார்களாம்! அதை இன்றைய தமிழரசுக் கழகவாதிகள் எடுத்து வைத்துக்கொண்டு, தமிழர்களை ஏமாற்றப் பார்க்கிறார்களாம். இப்படி ஒரு வகைப் பிரசாரத்தையும் திராவிடத்தார்கள் செய்து வருகிறார்கள். இதற்கும் நாம் பதில் சொல்லக் கடமைப்பட்டுள்ளோம். ஆனால், முன்பு தமிழ் நாடு தமிழருக்கே என்று சொல்லிய கூட்டம், பின்பு ஏன் அதை திராவிட நாடு திராவிடருக்கே என்று மாற்றிக் கொண்டது என்பதையும் நாம் ஆராய வேண்டும்.

## குரல் மாற்றத்துக்கு கொடுக்கும் காரணம்

தமிழ் நாட்டை, திராவிட நாடு என்று மாற்றிக் குரல் கொடுக்க ஆரம்பித்ததற்கு அவர்கள் சொல்லும் காரணம், தமிழ் நாடு என்றால், அது தமிழர்கள் அனைவருக்கும் உரிய நாடு ஆகிறதாம். தமிழருக்குரிய நாடு என்று ஒப்புக் கொண்டு விட்டால் "நாங்களும் தமிழர்கள் தான்" என்று கூறி, பிராமணர்களும் தமிழகத்தில் இடம் பெற்று நிலைத்து விடுவார்களாம்! எனவே, "திராவிட நாடு திராவிடருக்கே" என்று மாற்றிக்கொண்டார்களாம்! இது இவர்கள் வெளிப்படையாகக் கூறும் காரணம். ஆனால், உண்மையான காரணம் இதுவல்ல.

## உண்மைக் காரணத்திற்கு முன்

திராவிட நாடு திராவிடருக்கே என்று மாற்றிக் கொண்டதின் உண்மைக் காரணத்தை ஆராயுமுன், மாற்றம்

சரிதானா என்பதை ஆராயவேண்டும். "தமிழ் நாடு தமிழருக்கே!" என்ற கோரிக்கையில், தமிழ் நாடு தமிழருக்குரியது என்பது மட்டுமல்லாமல், அந்தத் தமிழ் நாட்டின் எல்லை, வடக்கே வேங்கட மலையுடன் முடிகிறது என்ற கருத்தும் சேர்ந்தே யிருக்கிறது. 'திராவிட நாடு' என்று மாற்றும்போதோ, அதன் வடவெல்லை விந்தியம்வரை யிலும் நீள்கிறது. தமிழகத்தின் மேற்கெல்லை மேற்குத் தொடர்ச்சி மலையுடன் முடிகிறதென்றால், திராவிட நாட்டின் மேற்கெல்லை, கன்னட கேரள நாட்டையும் தாண்டி மேலைக்கடல்வரை நீண்டுசெல்கிறது! சிந்திக்கட்டும் திராவிடர்கள்! தமிழ் நாடு என்றால், பிராமணனும் பங்கு கொள்ள வந்துவிடுகிறான் என்பதற்குப் பயந்து, கன்னட மலையாள ஆந்திர நாட்டையும் அதற்கப்பாலுள்ள மஹாராஷ்டிரத்தையும் தமிழன் ஆதிக்கம் கொள்ள விழைப்பதா? பயிரை மாடு மேய்ந்து விடும் என்பதற்காக வேலி அடைக்கிறேன் என்று கூறி, பக்கத்துக் கொல்லையையும் சேர்த்து அடைத்தால் கொல்லைக்காரன் சும்மா விடுவானா? எனவே, பிராமணர்களுக்குப் பயந்து, தமிழ்நாட்டை திராவிட நாடாக மாறியதாகக் கூறுவது பொருந்தாக் கூற்று. பொய்யிலும் பொய்!

### மாற்றிய காரணம்

1937 ம் ஆண்டுத் தேர்தலின் போது, சுயமரியாதைக் கழகத் தலைவர் ஈ. வே. ரா. யாரையும் கேட்காமல் தன் கட்சியை ஜஸ்டிஸ் கட்சியுடன் இணைத்து விட்டார். ஆத்திரம் கொண்ட தோழர்களில் பலர் வெளியேறினார்கள். வெளியேறுபவர்களைப்பற்றி கவலை கொள்ளாத ஈ. வே. ரா. ஜஸ்டிஸ் கட்சியார் தந்த பணத்திற்காக தேர்தல் பிரச்சாரம்

செய்யப் புறப்பட்டார். தேர்தலிலே கட்சி மண்ணைக் கவ்விற்று. மான உணர்ச்சி சிறிதளவு இருந்த காரணத்தால் ஜஸ்டிஸ் கட்சி தலைவர் பொப்லி ராஜா, கட்சியை விட்டு விலகிக்கொண்டார். ஈ. வே. ரா. தலையில், சிந்துவாரற்றுக் கிடந்த ஜஸ்டிஸ் கட்சியின் தலைமைப் பதவி விழுந்தது. கட்சிப் பத்திரிகையான விடுதலை, அதன் அச்சகம், கட்சி நிதி எல்லாம் ஒப்படைக்கப்பட்டன. ராஜாஜி தலைமையில் காங்கிரஸ் மந்திரி சபையும் வந்தது. காங்கிரசைவிட்டு ஓடிய ஈ. வெ. ரா. ஜஸ்டிஸ் கட்சி தலைமையை ஏற்கும் சமயம் பார்த்து, காங்கிரஸ் ஆட்சி நாட்டிலே ஏற்படுவதென்றால், அவரால் பொறுத்துக் கொண்டிருக்க முடியுமா? "காங்கிரஸ் ஆட்சி ஒழிக!" என்று 'ஒழிகக் குரல்' கொடுத்தார். காங்கிரசுக்குத்தான் நாட்டில் செல்வாக்கிருக்கிறது என்பதை உணர்ந்த பொப்லி ராஜா, மானத்துடன் கட்சியை விட்டு வெளியேறினாரென்றால் அந்தக் கட்சிக்கு அடுத்த தலைவராக வந்த ஈ. வே. ரா. காங்கிரசை ஒழித்தே தீருவேன் என்று துடை தட்டினார்.

## வெறும் வாய் மெல்பவனுக்கு!......

வெறும் வாய் மெல்பனுக்கு அவல் கிடைத்தால் சும்மா விடுவானா என்பது ஒரு தமிழ்ப் பழமொழி. அதுபோல, சும்மா காங்கிரசை திட்டிக்கொண்டிருந்த ஈ. வே. ரா. முன்பு, இந்திப் பிரச்னை வந்து வாய்த்தது! சும்மாயிருப்பாரா? தேசிய மொழியாக இந்தியை ராஜாஜி கொண்டு வந்ததும், ஈ. வே. ரா.விற்கு தமிழ்ப் பற்று உடம்பைப் பொத்துக் கொண்டு வெளிப்படலாயிற்று. "தமிழர்களே விழியுங்கள்! எழுங்கள்! கத்துங்

கள்" என்ற சொற்களுக்கிடையே தவறி, "தமிழ் நாடு தமிழருக்கே" என்ற சொல்லும் அவர் வாயிலிருந்து வந்து விட்டது! அதைப் பிடித்துக் கொண்டு அவர் தொண்டர்கள் கத்தவாரம் பித்தார்கள்.

இந்தி ஒழிந்தாலும் ஒழிய விட்டாலும், காங்கிரஸ் கட்சி, பதவியை ராஜிநாமாச்செய்தது. ஈ. வே. ரா.வின் சிஷ்யர்களும் கத்துவதை நிறுத்திக்கொண்டார்கள். காங்கிரஸ் மந்திரி சபை ராஜிநாமா செய்தது 1939-ல். அதை அடுத்து திருவாரூரிலே ஜஸ்டிஸ் கட்சி மாநாடு கூடிற்று. இந்தி எதிர்ப்பிலே ஈ. வே. ரா.வை ஆதரிக்காத கன்னட, மலையாள, ஆந்திரப் பிரமுகர்களெல்லாம் திருவாரூர் மாநாட்டிற்கு வந்திருந்தனர்.

## பிரச்சினை ஆரம்பம்

"ஜஸ்டிஸ் கட்சி சென்னை மாகாணக் கட்சி, அதை உம்மிடம் (ஈ. வெ. ரா விடம்) ஒப்புவித்தால் தமிழ் நாடு தமிழருக்கே என்ற கூக்குரலிற்கு, நீர் அதன் பணத்தை உபயோகிப்பதா? அப்படியானால் நீண்ட நாளாக நாங்கள் கூறிவரும் "ஆந்திர நாடு ஆந்திரருக்கே, கன்னட நாடு கன்னடருக்கே, மலையாள நாடு மலையாளிகளுக்கே" என்ற கூப்பாட்டிற்கும் ஜஸ்டிஸ் கட்சிப் பணத்தில் பங்கு வேண்டும் என்றனர். பண ஆசை பிடித்த ஈ. வெ. ரா. விற்கா கொடுக்க மனம் வரும்? யோசித்தார்! தமிழ் நாடு தமிழருக்கே என்பதைக் கைவிட்டார்! அதே நேரத்தில், ஆந்திர, கன்னட, மலையாளிகளின் மூக்கையும் உடைக்கத் திட்டமிட்டார்! மூளை வேலை செய்தது. ஜஸ்டிஸ் கட்சியை தென் இந்திய நல உரிமைச் சங்கமாக மாற்றினார்! ஆந்திர,

கன்னடிய, மலையாள பிரதிநிதிகள் வெகுண்டு வெளியேறினர். தமிழ் நாடு தமிழருக்கே என்பதை மாற்றக்கூடாதென்றார் திருச்சி விஸ்வநாதம். "உனக்கும் பெப்பே" என்றார் ஈ.வெ.ரா. இந்தத் தென்னிந்திய நல உரிமைச் சங்கம்தான், பிறகு நடந்த சேலம் மாநாட்டிலே திராவிடக் கழகமாயிற்று. தமிழ் நாடு தமிழருக்கே என்ற சொல்லும் அத்துடன் செத்தது. ஈ.வெ.ரா. விட்டெறிந்த அந்தச் சுலோகத்தை, அதேநிறவெறி அடிப்படையில், திருச்சி விஸ்வநாதமும் சில ஆண்டுகள் கத்திப் பார்த்து, யாரும் கேட்காததினால், "தமிழர்கள் உருப்படமாட்டார்கள், அவர்களுக்காக ஒரு இயக்கம் நடத்துவது வீண், என்று தன் பத்திரிகையில் அறிக்கை வெளியிட்டுவிட்டு பேசாது அடங்கிவிட்டார். இதுதான் தமிழ் நாடு திராவிட நாடானதின் வரலாறு.

## இரண்டும் ஒன்று?

சந்தர்ப்பத்தில் வாய் தவறிக் கூறிய 'தமிழ் நாடு தமிழருக்கே' என்ற கூக்குரலும், தேச விடுதலைக்குப் பின் தன் தாயக விடுதலைக்குத் தமிழினம் கொடுக்கும் "தமிழ் நாடு தமிழருக்கே" என்ற எக்காளமும் ஒன்று என்று சாதிக்கப் பார்க்கின்றனர் திராவிட திருமேனியினர்! எப்படி இரண்டும் ஒன்றாகும்?

தமிழ் நாடு தமிழருக்கே என்ற கூக்குரலின்போது ஈ.வெ.ரா. "நான் கேட்கும் தமிழ் நாடு, டில்லியின்கீழ் ஒரு மாகாணமாக இராமல் பிரிட்டிஷ் மன்னரின் ஆட்சியின் நேரடித் தொடர்புகொண்ட ஒரு சமஸ்தானமாக இருக்க விரும்புகிறது!" என்று கூறினாரே தவிர, சுதந்திர நாடாக—வெள்ளையன் ஆட்சி நீங்கி—வாழவேண்டும் என்று

சொன்னதே கிடையாது. அந்த அடிப்படையிலா இன்று தமிழ் நாடு பிரிய வேண்டும் என்று தமிழரசுக் கழகம் கூறுகிறது?

"சுரண்டலற்ற சோஷலிச குடியரசாக, மத்திய ஆட்சியில் இணைந்து வாழ்வோம். மாகாண சுதந்திரத்தில் மத்திய ஆட்சி கை வைப்பதானால், தமிழ் நாடு மத்திய ஆட்சியின் தொடர்பற்ற தனி நாடாகவும் இயங்கும்!"

என்றல்லவா தமிழரசுக் கழகம் கூறுகிறது. "இரண்டும் ஒன்றே! சொன்னோம் சொல்கிறார்கள்" என்று கூறும் தோழர்களைக் கேட்கிறோம்; இரவிலே கண் சிமிட்டும் எலக்டிரிக் விளக்கு நட்சத்திரமாகிவிட முடியுமா? பிராமணன் தனி ஜாதி, பிராமணர் அல்லாதார் அடங்கலும் ஒரு ஜாதி என்று ஜாதீய அடிப்படையில் சந்தப்பவாதமாக எழுப்பப்பட்ட ஒலியும், "தமிழர் ஒரே இனம் தமிழ் நாட்டில் வாழும் மக்கள் அனைவரும் (ஜாதிப் பாகுபாடின்றி) தமிழர்களே!" என்று கூறப்படும் தமிழரசுக் கழகத்தாரின் லட்சியமும் எப்படி ஒன்றாக முடியும்? இந்தியின் பெயரால், காங்கிரஸ் ஆட்சியைக் கவிழ்ப்பதற்கு, தமிழர்களின் ஆதரவைத்திரட்ட—தமிழர்களை ஏமாற்ற—உபயோகித்த 'தமிழ் நாடு தமிழருக்கே' என்ற சொல்லும், தன் இன வாழ்விற்காக இன்று தமிழர்கள் உணர்ச்சியுடன் கொடுக்கும் 'தமிழ் நாடு தமிழருக்கே' என்பதும் ஒரே குரல் தான்" என்று ஒப்பிட்டுக்காட்டி, நல்லதொரு திட்டத்தை நாசமாக்கும் பெரியாருக்குச் சொல்லுகிறோம்' அவரைப் பின்பற்ற நினைக்கும் இளைஞர்களையும் கேட்டுக் கொள்கிறோம், உங்களுக்கு தமிழின் மீதோ, தமிழ்

நாட்டின் மீதோ, சிறிதளவேனும் பற்றிருக்குமானல், கொஞ்சகாலம் வாய்மூடி மௌனியாக இருங்கள்! "தமிழ் நாடு தமிழருக்கே என்பது நாங்கள் சொல்லிய பழய பல்லவிதான். ஜின்ன சாகேபிற்கு, பாகிஸ்தான் பிரிவினை திட்டத்தை எங்கள் பெரியார்தான் சொல்லிக் கொடுத்தார்" என்றெல்லாம்கூறி, வாத்தியார் பட்டம் கட்டிக் கொள்வதில் பெருமை அடைய நினைப்பதைவிட்டொழியுங்கள். அதனால், தமிழ் இனம் வாழ வழி கோலிய பெருமையை அடைவீர்கள்!

## கம்யூனிஸ்ட்டு கட்சியும்—தமிழரசும்

கம்யூனிஸ்ட்டு கட்சியின் அடிப்படை லட்சியம் தேசிய இனங்களை ஒப்புக்கொள்வதாகும். பல மொழிகள் வழங்கப்படும் ஒரு பெரிய தேசத்தில், மொழிவழி தேசிய இனத்தின் பெயரால் பல குடியரசுகளை நிறுவி, தங்களின் நலனுக்காக அந்தக் குடியரசு நாடுகள் ஒரு மத்திய ஆட்சியை ஏற்படுத்திக் கொள்வது என்பதுதான் சரியான அடிப்படையுள்ள அரசியல். தமிழரசுக் கழகக் கொள்கை. கம்யூனிஸ்ட்டுகளுக்கும் இது உடன்பாடானதே.

## பொருளாதாரப் பிரச்னையிலும்

பொருளாதாரப் பிரச்னையிலும் தமிழரசுக் கழகத்தின் திட்டம்தான் கம்யூனிஸ்ட்டுகளுக்கு உடன்பாடாக இருக்க முடியும்.

ஜாதிப் பாகுபாடுகள் மாண்டு, நிலப்பிரபு, நிலம் இல்லாதவன், முதலாளி, தொழிலாளி என்ற வேற்றுமைகளை

களைந்து, உத்தியோகத் திமிர், ஊராள்வோன் என்ற அகந்தை, உழைக்காமல் உல்லாச வாழ்க்கை நடத்தும் உளுத்துப்போன சம்பிரதாயம் ஆகியவற்றிற்குச் சமாதி நிலை கண்டு, தொழிலின் பெயரால் வர்க்கங்களை அமைத்து, அந்த வர்க்க அடிப்படையில் தேர்தல் நடத்தி, பிரதிநிதிகளை தேர்ந்தெடுத்து ஆட்சி நடத்தப் படும், அதுதான் ஜனநாயக சோஷலிச தமிழ்க் குடியரசு என்று கூறுகிறது தமிழரசுக் கழகம். அதுவும் அகிம்சை யின் வழியில் நடைபெற வேண்டும் என்கிறது.

## மறுக்க முடியாது

கம்யூனிஸ்ட்டுகள் இதை மறுக்க முடியாது. "தமி ழரசுக் கழகம் சொல்வதுதான் சரி, அதை நாங்கள் வர வேற்கிறோம்" என்றுதான் அவர்கள் கூறவேண்டும். ஆனால், தமிழரசுக்கழகத்தார் சொல்லி நாம் கேட்பதா என்ற அகந்தை அவர்களை தமிழரசுக் கழகத்தார்களுடன் நெருங்க முடியாதபடி செய்கிறதே தவிரவேறில்லை. ஆகவே, இனவழி அரசு கோரும் தமிழரசுக் கழகவாதிகளை விட்டு விட்டு நிறவெறி அரசென்று சொல்லும் திராவிடத்தார் களுடன் கூடிக்குலாவினர்கள்.

## போதையிலும் நிதானம்

தேர்தலிலே வெற்றிபெற வேண்டும் என்ற ஆவேசப் 'போதை'யிலே கம்யூனிஸ்ட்டுகள் திராவிடத்தார்களைத் 'தழுவ' ஆரம்பித்தார்களே தவிர, உண்மையில் திராவிடக் கழகத்தார்களின் கொள்கையில் கம்யூனிஸ்ட்டுகள் நம் பிக்கை உடையவர்கள் என்று கூறிவிட முடியாது. பலம் பொருந்திய காங்கிரஸைக் கவிழ்த்துவிட்டால், அப்புறம்

பஞ்சை திராவிடத்தார்களை நொடியில் பொடி சூரணமாக்கிவிடலாம் என கம்யூனிஸ்ட்டுகள் சரியானபடி உணர்ந்திருந்தார்கள். எனவே, காங்கிரஸ் ஒழிப்பில் திராவிடக் காக்காய் பிடிப்பை நடத்தினார்கள். ஆனால், இந்தத் தழுவல் போதையிலும் கம்யூனிஸ்ட்டுகள் நிதானத்தை அதிகமாக இழந்துவிடவில்லை. சமயம் வாய்த்த போதெல்லாம், 'திராவிடம் எங்களுக்கு உடன்பாடல்ல' என்றே சொல்லி வந்திருக்கிறார்கள்- ஆழ்ந்து நோக்கினால் தங்கள் காரியத்திற்கு திராவிடத்தார்களை கம்யூனிஸ்ட்டுகள் பயன் படுத்திக் கொண்டிருக்கிறார்களே தவிர, கம்யூனிஸ்ட்டுகள் திராவிடர்களுக்குப் பயன்பட்டிருக்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது, தேர்தலின் போது கொடுத்த 'சில்லரை'களைத் தவிர!

## அதனால் யோக்கியர்கள் அல்ல

கம்யூனிஸ்ட்டுகள் நிறவெறிக் கட்சியினரான திராவிட மலான்களுக்கு தங்களைப் பலியாக்கிக் கொள்ளாதவர்கள் என்பதற்காக நாம் அவர்களை யோக்கியர்கள் என்று சொல்லிவிட முடியாது. ஏனென்றால் அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டிய நல்லதொரு திட்டமான தமிழரசுக் கழகக் கொள்கையை ஒப்புக்கொண்டு ஒன்று சேர்ந்து பணியாற்ற இன்று வரை இசையாதவர்கள். அது மட்டிலுமல்ல,

## விரோதிகளும் கூட!

கம்யூனிஸ்ட்கள் தமிழரசுக் கழகக் கொள்கைகளை நசுக்கக் கங்கணம் கட்டிக்கொண்டு வேலை செய்த விரோதிகளும் கூட.

## போராட்டக் காலத்தில்......

திருவிதாங்கூர் சமஸ்தானத்துடன் இணைக்கப் பட்டிருக்கும் தமிழ்ப் பகுதிகள் தாய்த் தமிழகத்துடன் சேர்க்கப் படவேண்டும் என்ற போராட்டம் நாஞ்சில் நாட்டில் துவக்கப்பட்டபோது, மண் வெறிபிடித்த மலையாள பட்டம் தாணு, போலீசை ஏவிட்டு ஐக்கிய தமிழகம் கோரிய திரு-தமிழக தமிழர்களைத் தாக்கச்சொன்னார். செல்லையா, தேவ சகாயம் என்ற இரு பெரும் வீர இளைஞர்கள் அந்தப் போராட்டத்திலே, மலையாள போலீஸின் துப்பாக்கி முனைக்கு மார்பைக் காட்டி மரணத்தைத் தழுவினார்கள். தமிழ் மாதர்களின் கற்பு மலையாள போலீஸாரால் சூறையாடப்பட்டன. "மொழி வழி அரசு அமைப்பு எங்களுக்கும் உடன் பாடு" என்று இன்று கூறும் கம்யூனிஸ்ட்டுகள் அன்று அந்தக் கொடுமையை அகற்றப் பாடுபட்டோர்களுடன் ஒத்துழைக்க முன்வரவில்லை. ஒதுங்கி நின்றே வேடிக்கை பார்த்தனர்.

"மதராஸ் மனதே" என்று ஆந்திரர்கள் சென்னைத் தெருக்களிலே வெறி பிடித்துக் கத்திச் சென்றபோது, "நில் ஆந்திரனே, சென்னை தமிழனுடைய தலைநகரம்" என்று தடுத்து நிறுத்தப் புறப்பட்ட தமிழரசுக் கழகப் படைக்கு கம்யூனிஸ்டுகள் ஆதரவு காட்டவில்லை. உலகத்தில் எங்கோ நடக்கும் விஷயத்திற்கெல்லாம் விரைந்து பறந்து தீர்மானங்கள் நிறைவேற்றும் கம்யூனிஸ்ட்டுகள் "ஆந்திரர்களின் செய்கை அநீதி" என்று தீர்மானம் கூடப் போடவில்லை. ஆனால், இதற்கு மாறாக, ஆந்திர-தமிழகக் கம்யூனிஸ்ட்டுகள் கூடி, தமிழகத்தின் வடக்கெல்லையான வேங்கடம் ஆந்திரர்களைச் சேர்ந்தது!" என்று

முடிவு செய்தார்கள். இது தப்பு என்று கண்டித்த தமிழரசுக் கழகத் தலைவர் ம. பொ. சி. யை வாயில் வந்தபடி திட்டி பத்திரிகையில் எழுதினார்கள்.

## அதுமட்டுமல்ல

பிரஞ்சு ஆதிக்கத்திலுள்ள காரைக்கால் புதுச்சேரி யான தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் இணைக்கப்பட வேண்டும் என்று தமிழரசுக் கழகம் ஆரம்பத்திலிருந்தே சொல்லி வந்திருக்கிறது. நியாயப்படி இதற்கு ஆதரவு தர வேண்டியதிருந்தும், பிரஞ்சுத் தமிழகம் தாய்த் தமிழகத்துடன் சேரக்கூடாதென்று கூறின திராவிடக் கழகத்தாருடன் கூடிக் குலாவினார்கள். பிரஞ்சுக்காரனுக்கு தமிழ்த் தேசீய இனத்தைக் காட்டி கொடுப்பாருடன் குலாவுவதுதானா தேசீய இனங்களை ஒப்புக்கொள்வதாகக் கூறும் ஒரு கட்சிக்குள்ள நேர்மை என்று கேட்ட போது நம்மைத் திட்டினார்கள்.

இன்றளவும் திருப்பதி தமிழருடையது என்று கம்யூனிஸ்டுகள் சொல்லியது கிடையாது. வடவெல்லைப் போராட்டத்தில் கலந்துகொள்ளவில்லை. புத்தூரில் நடந்த வடவெல்லை மீட்சிக் கூட்டத்தில், சிவையாவை விட்டுக் கலகம் செய்யப்பணித்தார்கள். திருவிதாங்கூர் தமிழ்ப் பகுதிகளிலுள்ள தேவிகுளம் பீருமேடுப் பகுதிகளை தமிழர்கள் கேட்பது நியாயமற்ற கோரிக்கை என்று கூறுகிறார்கள். திரு-தமிழகம், தாய்த்தமிழகத்துடன் இணைவதொன்றையே தேர்தல் பிரகடனமாக வைத்து மலையால காங்கிரசுடன் போட்டியிட்ட திரு-தமிழக காங்கிரசிற்கு

போட்டியாக ஆள் கிறத்தி, திரு-தமிழக இணைப்புப் பிரச்சினையை சாகடிக்க முயன்றார்கள்.

1952-ம் ஆண்டு தேர்தலுக்கு முன்புவரை, தமிழ்த் தேசிய இனக் கோரிக்கையான மொழி வழி மாகாண அமைப்பைப்பற்றி மௌனம் சாதித்துவிட்டு, தேர்தல் நேரத்திலே வந்து, "நாங்களும் மொழி வழி நாடு வேண்டும் என்றுதான் சொல்லுகிறோம்; திருவிதாங்கூர் தமிழகம், தாய்த் தமிழகத்துடன் இணைவதை வரவேற்கிறோம், சென்னை தமிழரின் நகரே" என்றெல்லாம் பேசினார்கள். ஆனால், அந்தக் கொள்கைக்காக பாடுபட்டுவரும் தமிழரசுக் கழகத்தார்களை கம்யூனிஸ்ட்டுகளின் "விரோதிகள்" என்றார்கள் "காங்கிரசின் கூலிகள்" என்றார்கள். "பணக்காரர்களின் பாதுகாவலர்" என்றார்கள். அதற்காக தமிழரசுக் கழகத்தினர் அஞ்சவில்லை. திடசித்தத்துடன், 'தமிழர்களே உஷார்! தழைக்கட்டும் தமிழ் சோஷிலிசக் குடியரசு' என்று குரல் கொடுத்தனர். சூழ வந்த ஆபத்திலிருந்து தமிழகம் காப்பாற்றப் பட்டிருக்கிறது. பலாத்காரத்தை கைவிட்டுவிட்டு, ஒத்துழைக்க வருவார்களேயானால் கம்யூனிஸ்ட்டுகள் தமிழரசுக் கழகத்தார் கவனத்திற்கு உரியவர்கள் ஆகலாம். ஆனால் அப்படி ஒரு நாளும் கம்யூனிஸ்ட்டு முகாம் மாறப்போவதில்லை. தமிழரசுக் கழகமும், கம்யூனிஸ்ட்டு கட்சியும் இணையப்போவதுமில்லை. தமிழரசுக் கழகம் தேசிய இன அடிப்படைக் கழகம். கம்யூனிஸ்ட்டு கட்சி, தங்களுக்கும் அது உடன்பாடு என்று கூறிக்கொண்டே தேர்தல் வந்ததும் வீறவெறி பேசும் திராவிடக் கழகத்தார்களுடன் குலாவி மகிழும் கட்சி.

## சோஷலிஸ்ட்டுகள்

இந்திய சோஷலிஸ்ட்டுக் கட்சிக்கும் மொழிவழி நாட்டு அமைப்பிற்குமே என்றும் சம்பந்தமிருந்ததாகத் தெரியவில்லை. "மொழிவழி நாடு கோருவது போன்ற மாகாணவெறி, தேசத்தின் சுபிக்ஷத்திற்கு முட்டுக்கட்டையாகும்" என்று அசோக் மேத்தா, ஜெயப்பிரகாஷ் போன்றவர்கள் பேசாத நாட்கள் மிகக் குறைவான நாட்களே !

## தமிழகத்திற்குத் துரோகம்

கம்யூனிஸ்ட்டுக்கள் வேங்கடத்தை ஆந்திருக்குத் தாரை வார்க்க ஒப்பினார்கள் என்றால், இவர்கள் சென்னை நகரத்தை மட்டும் தனி மாகாணமாக்கி மத்திய ஆட்சியின் நேரடிப்பார்வையில் விட்டுவிட வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றினார்கள். ஆனால்—

## திடீர் மாகாணப் பற்று !

நடந்தபொதுத்தேர்தலின்போது கம்யூனிஸ்ட்டுகளைப் போன்றே இவர்களுக்கும் திடீர் ஞானம் உதயமாயிற்று! "தமிழ் நாடு தனி மாகாணமாக்கப்பட வேண்டும், சென்னை தமிழருடையதே", என்றெல்லாம் பேசினார்கள். என்றாலும் அவர்கள் எதிர்பார்த்த பலன் கிட்டவில்லை. எனவே, மீண்டும் பழைய பல்லவிக்கே போய்விட்டார்கள். தேர்தல் முடிந்ததுமே அசோக்மேத்தா, "மாகாண வெறி மாகாணப் பிரிவினை" ஆகியவைகளுக்கு நாம் இடந்தரலாகாது என்று கண்டனக் குரல் கொடுக்க ஆரம்பித்துவிட்டார்.

## காங்கிரஸும் அவர்கள் பாதையில்

தி. க., தி. மு. க., கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டு கட்சிகள்தான் இந்த நிலையில் நடந்து கொள்கிறதென்றால், இந்தக் கட்சிகளையெல்லாம் ஈன்றெடுத்த இந்தியாவின் தாய்ச் சபையான காங்கிரஸ்கட்சியிருக்கிறதே அதுவும் தமிழரசுக் கழகக் கொள்கையை அமுல் நடத்தத் தயாரில்லை. மற்ற கட்சிகளெல்லாம் ஆரம்பத்தில் மொழிவழி ராஜ்ய அமைப்பை எதிர்த்துவிட்டு கடைசியில் ஆதரிக்க முற்பட்டிருக்கின்றன என்றால், காங்கிரஸ் ஆரம்பத்தில் மொழிவழி ராஜ்யம் கோரிவிட்டு இன்று அது ஆபத்து என்று சொல்லும் நிலைக்கு வந்திருக்கிறது. வெள்ளையன் ஆண்ட காலத்திலே, அவன் அமைத்திருக்கிற மாகாண அமைப்பு முறை சரியில்லை, நாங்கள் ஆட்சியைக் கைப்பற்றியதும் மொழிவழியாக இந்தியராஜ்யங்களை அமைப்போம் என்று குரல் கொடுத்தது காங்கிரஸ், அதற்கு அறிகுறியாக கட்சி நிர்வாக மாகாணங்களை மொழி அடிப்படையில் அமைத்து அமுல் நடத்திக் காட்டிற்று. ஆனால், ஆட்சியை ஏற்றதும் (ஆதிக்கம் நிலைப்பதற்காக) மொழிவழி ராஜ்யம் இப்போதைக்கில்லை என்று சொல்லுகிறது. என்றாலும் இவர்களின் அதிகாரம் அடங்கி நடப்பவர்களைத்தான் மிரட்டப் பயன்படுகிறதே தவிர, அதட்டிப் பேசியோர்களிடம் நடக்கவில்லை. அதட்டிப் பேசியதின் பயனாக 1947-ம் ஆண்டிற்குப் பிறகு, 1953-ம் ஆண்டிற்குள் தமிழகத்தின்வடக்கே மூன்று மொழிவழிராஜ்யங்கள் அமைந்திருக்கின்றன. ராஜஸ்தான், சௌராஷ்டிரம், ஆந்திரம் ஆகிய மூன்றும் புதிதாக அமைந்த மொழிவழி ராஜ்யங்களாகும். இன்னும் கொச்சி—திருவிதாங்கூர், விந்திய பிரதேசம், மத்திய பிரதேசம், உத்திர

பிரதேசம் போன்றவைகளும் சுதந்திர இந்தியா நிறுவிய புதிய ராஜ்யங்களே! வெள்ளையன் ஆண்ட காலத்தில், "ராஜாக்களேன்? கவர்னர்கள் ஏன்? இவர்களையெல்லாம் ஒழித்துக்கட்டி, ராஜ்ய புணரமைப்புச் செய்து, ஒவ்வொரு ராஜ்யத்தையும் ஒவ்வொரு குடியரசு நாடு எனப் பிரகடனப்படுத்தி, அந்தந்தக் குடியரசு நாடுகளுக்கும் அந்தந்த நாட்டு மக்களே தங்களின் வாக்களிப்பின்மூலம் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அந்தந்த தலைவர்களின்கீழ், அந்தந்த நாட்டு மந்திரி சபை இயங்கும்" என்றெல்லாம் காங்கிரஸ் சொல்லி வந்தது. இன்றைய இந்தியாவில், காஷ்மீர் ராஜ்யம் ஒன்றுக்கு மட்டுமே அந்த உரிமை கிடைத்திருக்கிறது. மற்ற ராஜ்யங்களுக்கும் அது போன்ற அதிகாரம் என்று கிடைக்குமோ தெரியவில்லை! அரசியல் புரியாத தி. க., தி. மு. க.கள்தான் இது பற்றிப் பேசுவதில்லை என்றால், அரசியல் புரிந்து, அகில இந்திய ரீதியிலே கட்சியமைத்து நடத்திவரும் கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டுகள்கூட இதுபற்றிப் பேசுவதில்லை! காரணம், மாகாண சுயாட்சி கொடு என்று இன்று குரல் கொடுத்துவிட்டால், நாளை நாம் ஆட்சிக்கு வந்தால் கொடுக்க வேண்டுமே? கொடுத்தால் ஆதிக்கவாதிகள் எதேச்சாதிகாரம் செய்யவழியிருக்காதே என்ற நினைப்பில், மக்கள் மனதில் அந்த எண்ணம் உதிக்க வழியில்லாமலே அவர்களும் செய்து வருகிறார்கள். இந்தச் சமயத்திலே தமிழரசுக் கழகம் ஒன்று மட்டுந்தான்,

"இந்திய ராஜ்யங்களை மொழிவழியாக ஆக்கு! அந்த மொழிவழி ராஜ்யங்களை குடியரசு நாடுகள் என்று பிரகடனம் செய்! கவர்னர்களை

> வாபஸ் வாங்கு. தேர்தல் வழியிலே மாகாணத் தலைவர்களை (குடியரசுத் தலைவர்கள்) தேர்ந் தெடுக்க சட்டம் கொண்டு வா. அரசியல் சட் டங்களை அந்தந்த (குடியரசு) ராஜ்யங்களே இயற்றிக்கொள்ள விட்டுவிடு"

என்றெல்லாம் குரல் கொடுக்கிறது. எனவே, காங்கிரஸ் கட்சிக்கும் தமிழரசுக் கழகம் 'அடங்காப்பிடாரி'யாகத் தோன்றுகிறது.

> "ஐயனே, ஆத்திரப்படாதீர்கள். தமி ழரசுக் கழகம் சொல்வதுதான் பழய காங்கிரஸ் திட்டம். சரித்திர ஏட் டைக்கொஞ்சம் புரட்டிப்பாருங்கள்"

என்று தமிழரசுக் கழகம் கீழ் ஸ்தாயிலே கெஞ்சும் குரலெழுப்பிக் கேட்டாலும் "உன்னை யார் இதுபற்றிப் பேசச் சொன்னது? போ வெளியே என்கிறார்கள்.

## அவர்கள் குற்றமா ?

இப்படி தி. மு. க. முதல், காங்கிரஸ் ஈராக, இடையி லுள்ள கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டுகள் ஆகிய எல்லாக் கட்சியினரும், கழகத்தாரும் மொழிவழி அடிப்படையை ஒப்புக்கொண்டிருந்தும், அதை அமுல் நடத்தமுடியாமலும் பாடுபட விரையாமலும் இருப்பதற்குக் காரணம், இவை களில் எதுவும் எந்த ஒரு தனி இனத்திற்காகவும் அமைந்த கட்சிகளல்ல. காங்கிரஸ், கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டு ஆகிய கட்சிகள் அகில இந்திய கட்சிகளென்றால், தி. க., தி. மு. க.வினர் விந்தியத்திற்கு இப்பாலுள்ள இனங் களுக்கான பொதுக் கட்சிகள். இந்திய மாதாவிற்கு

பதினெட்டு மொழிவழிக் குழந்தைகள். திராவிட மாதாவிற்கு நான்கு குழந்தைகள். காங்கிரஸ்—கம்யூனிஸ்டு—சோஷிலிஸ்டு கட்சிகள், இந்திய மாதாவின் பதினெட்டு குழந்தைகளும் ஒன்றாக ஒற்றுமையாக இருக்கவேண்டும் என விரும்புகிறார்கள். திராவிடக் கட்சியினரோ திராவிடத் தாயின் புத்திரர்களான ஆந்திர, கன்னட, மலைநாலு தமிழகமென்ற நான்கு இனக் குழந்தைகள் மட்டும் தனியாக ஒன்றுபட்டு இருக்க வேண்டுமென்கிறார்கள். இப்படி இந்தக் கட்சிகளனைத்தும் தங்கள் தங்கள் அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் செலுத்த, ஒற்றுமை (இந்தியா—அல்லது திராவிடம்) பேசுகிறார்களே தவிர, தேசிய இனங்களின் நலன்களைக் கவனிப்பதில்லை! கட்சி நலம் இன நலத்தை உதாசீனம் செய்ய வைக்கிறது. ஆனால், மொழிவழிக் குழந்தைகள் இவர்களையும்மீறி, தனிக் குடித்தனம் நடத்த முடிவுகட்டி விட்டார்கள். பல குடித்தனங்கள் அப்படி அமைந்தும்விட்டன. இந்த நிலையில், பிரியும்போது பதறி, வேறு வழியில்லை என்ற நிலை வரும் போது பிரிவினையை ஒப்புக்கொள்ளும் இந்த கட்சிகளனைத்தும், பாகப் பிரிவினை விஷயத்தில் மட்டும் தீர்ப்பு வழங்கும் பொறுப்பேர்க்க விரும்புவதில்லை. காரணம், தன் தீர்ப்பு ஒரு இனத்திற்குச் சாதகமாக இருந்துவிட்டால், இன்னொரு இனம் நம் கட்சியை வெறுக்குமே என்ற பயம். இவர்களில் யாராலாவது மொழிவழிப் பிரிவினையைத் தடுக்க முடியும் என்றால், நாமும் கவலைப்படத் தேவையில்லை. பிரிவினை என்ற கட்டம் வந்துவிட்ட பின்பு அலட்சியமாக இருந்தால், அப்படி இருக்கும் இனம் ஏமாறுவது இயற்கையே! ஆகவேதான், காங்கிரஸ் கட்சி கண்டித்தாலும், கம்யூனிஸ்டுகள் ஆத்திரப்பட்டாலும், சோஷலிஸ்டுகள்

துஷ்டக் குழந்தையென்றாலும், திராவிடத்தார்கள் "அடிமைகள் அடிவருடிகள்" என்று அலறினாலும், ஆத்திரப்படாமல், தமிழ் மொழிவழி இனத்தின் பாதுகாவலுக்கென்றே அமைந்துள்ள தமிழரசுக் கழகம், தலைநகர் பாதுகாப்பு பணியிலும், எல்லை மீட்சிகளிலும் ஈடுபட்டது. மற்ற உரிமையைப் பெறவும் விடாது பாடுபட்டுவருகிறது. தமிழ்த் தேசிய இனம், எந்தக் கட்சி ஆளுகையின்கீழ் இருப்பதென்பது இப்போதுள்ள பிரச்சினையல்ல—அது திராவிட ஆட்சியோ, இந்திய ஆட்சியோ—மத்திய ஆட்சி பொறுப்பை யார் வேண்டுமானாலும் ஏற்றுக்கொள்ளட்டும். ஆனால், தமிழ்த் தேசிய இனத்தின் உள் வீட்டு நிர்வாகத்தில் யாரும் வீண் அதிகாரம் செலுத்தக்கூடாதென்பதே தமிழரசுக் கழகத்தின் கொள்கை. ஆகவே, தமிழ் இன உரிமைக்கு தமிழரசுக் கழகத்தைத் தவிர இதர எந்தக் கட்சியோ கழகங்களோ பேசவில்லையே என்று கவலைப்படுவதைவிட, பேசும் அமைப்பில் அந்தக் கட்சிகள், கழகங்கள் அமையவில்லை என்பதை நாம் தெரிந்துக் கொள்ளவேண்டும். ஏனென்றால் இவைகளில் எதுவும் தமிழினத்திற்காக மட்டுமுள்ள தனிக் கட்சிகளில்லையல்லவா?

மேலும், தமிழர் நலன்களுக்காக இல்லாவிட்டாலும், தமிழ் நலனுக்குக்கூட இந்தக் கட்சிகளில் எந்தக் கட்சியினரும் இதுவரை பாடுபடவில்லை! பாடுபடவும் முடியாது!

## இதுவும் அப்படியே!

காரணம், காங்கிரஸ் அகில இந்திய இலக்கியம் பற்றித்தான் பேச முடியும். தி. க., தி. மு. க.களுக்கும் நியாயப்படி, திராவிட பொது இலக்கியம் வளர்க்க வேண்டியவர்

களே! அதனால்தான் இவர்களில் யாராலும் தமிழர்களின் சரித்திர ஆராய்ச்சி, த மிழினத்தின் சுதந்திரப் போராட்ட வரலாறு என்று இன நலத்தின் பெயரால் எழுத முடிவதில்லை. கம்யூனிஸ்டு ரஷ்ய—சீன இலக்கியம் என்பவர்கள். சோஷலிஸ்டுகள் அதற்கு அப்பாலுள்ள நாடுகளையும் சேர்த்த இலக்கியச் சாறு பிழிந்து தருவார்கள். இந்த நிலையில், இன்பத் தமிழகத்தின் சரித்திரத்தை—இலக்கியத்தைப் பற்றி ஒரே ஒரு குழுவினரால்தான் பேச முடியும்! பேசுகிறார்கள்! அதுதான் தமிழரசுக் கழகம். மற்றபடி திராவிடச் சிந்தனையாளர்கள் என்பார்கள் திராவிடத்தார்கள். ஆனால் ஷேக்ஸ்பியரையும், பெர்னட்ஷாவையும் பற்றியே எழுதிக் குவிப்பார்கள். கம்யூனிஸ்டுகள் ஐக்கிய தமிழகம் என்பார்கள், ஆனால், உவமைக்குக்கூட வறுமை ஒழிய எழுதிப்பேசிய வடலூராரையோ, வள்ளுவரையோ, சொல்ல மாட்டார்கள். கார்ல் மார்க்ஸும் ஸ்டாலினும் லெனினும் தான் அவர்கள் கருத்தில் இடம் பெறுவார்கள். காங்கிரஸ்காரர்களுக்கு புரட்சி வீரன் என்றால், சுபாஷ்போஸ் தான் நினைவிற்கு வரும். வீரன் செண்பகராமனோ, கட்டப்பொம்மனோ கண்களில் படுவதில்லை. சோஷலிஸ்டுகளுக்கோ ஜெயப்பிரகாஷ், அசோக்மேத்தா போன்றவர்களிடம்தான் மதிப்பும் பக்தியும். தமிழ் நாட்டில் தலைவர்களே கிடையாது என்று எண்ணுபவர்கள். புராணவாதி எல்லாம் மேலுலகத்தில் கிட்டும் என்பான். தி. க., தி. மு. க. களோ, அனைத்தும் திராவிட சொர்க்கத்தில் என்பார்கள். கம்யூனிஸ்டுகள் ரஷ்ய நாட்டைப் பார் என்பார்கள். சோஷலிஸ்டு, உலகப் புரட்சி பேசி, பூமிதானத்தால் போக்குவோம் வறுமையை என்பார்கள். காங்கிரஸ்காரர்கள் எல்லாம் ஐந்தாண்டு திட்டத்திற்குள் அடங்கியது என்பார்கள்.

ஆனால் இவர்களில் யாரும் நைந்த தமிழ் மக்களின் வாழ்க்கையை எண்ணிப்பார்ப்பதில்லை. பாம்பு தவளையை வயிற்றுக்குள் வைத்து வளர்க்க விழுங்குகிறேன் என்பதுபோல, படித்த கூட்டமும், பணக்கார கூட்டங்களும் கட்சிகளையும் கழகங்களையும் வளைத்துப் பிடித்துக்கொண்டு வறுமையைப் போக்கிவிடப் போவதாகக் கதைக்கிறார்கள். சோஷலிசத்தைக் கொண்டு வரப்போகிறேன் என்கிறார்கள். வழித்துணையாக வந்து வழி மறித்தடிப்பதுபோல், நெஞ்சுலர்ந்த தமிழ் மக்களை இந்த வஞ்சகக்கூட்டம் வளைத்துக் கொண்டு சுயதேவைப் பூர்த்தி நடத்தி வருகிறது. வெளிநாட்டையும். வடநாட்டையும், திராவிட நாட்டையும் சொல்லி தமிழ் மக்களை வாழ்விக்கப்போவதாகக் கதைக்கின்றது. இந்தப் பொய்மை முயக்கப் புல்லறுவிகளை திருத்த உண்மை அரசியல்வாதிகளால் நிறுவப்பட்டதே தமிழரசுக் கழகம்.

## ஏன் வந்தது?

"தமிழரசுக் கழகம் ஏன் வந்தது?" என்று கேட்போர் சிந்திக்கட்டும்.

தமிழருக்காகப் பேச, தமிழ் மொழிக்காகப் பாடுபட, தமிழ்க் கலாச்சாரத்தைப் பரப்ப, தமிழர் பண்பாட்டைக் காப்பாற்ற எந்தக் கட்சியும் முன்வராதபோது, தமிழனின் உயர்வுபேண தமிழரசுக் கழகம் தோன்ற வேண்டியதாயிற்று! தமிழனின் வாழ்வு மலர தமிழரசுக் கழகத்தை துவக்க வேண்டியதாக இருந்தது. குறை சொல்லும் கூட்டத்தினர் கட்சியாகவும் கழகங்களாகவும் பரிணமித்ததால், கொள்கை ரீதியாக தமிழ் நாட்டிற்குப் பணிபுரிய தமிழரசுக் கழகம் தோன்ற வேண்டி வந்தது.

போலி நாகரீகம் தமிழரின் பழக்க வழக்கத்தை கருவருக்க முனைந்துவிட்டதால், அதைத் தடுத்து நிறுத்த தமிழரசுப் படை தழைக்கவேண்டியதாயிற்று. இலக்கியத்தை அழிக்கும் சனப் பிறவிகள் மலிந்துவிட்ட நேரத்திலே, இலக்கியத்தைக் காப்பாற்ற எழுந்தது தமிழரசுக் கழகம். உண்மை அரசியலை சுயநலக் கூட்டம் சூழ்ந்து இருட்டிப்புச் செய்ததால், இதுதான் உண்மை அரசியல் என்பதை எடுத்தியம்ப தமிழரசுக் கழகம் தோன்றவேண்டியதிருந்தது. "வடக்கை வசை பாடுவதால் தெற்கு செழித்துவிடாது" என்பதை எடுத்தியம்பி, திராவிட இளைஞர்களை தீய சக்தியிலிருந்து மீட்க தமிழரசுக் கழகம் வரவேண்டியதாயிற்று! பலதரப்பட்ட ஆந்திர அரசியல்தலைவர்களையும் ஆந்திர மக்களையும் ஒன்றாக இணைந்து நிற்கச் செய்து, அகண்ட ஆந்திர ராஜ்யம் வேண்டும் எனக்குரல் கொடுக்க அரசியல் அற்ற தேசிய இயக்கமாக ஆந்திரர்களுக்கு 'ஆந்திர மகா சபை' தோன்றியதுபோல, தமிழர்களுக்கு ஒரு இயக்கம் வேண்டும் என்ற எண்ணத்தின் எதிரொலியே தமிழரசுக் கழகம். கேரள ராஜ்ய கிளர்ச்சிக்கு கேரள சமாஜம்போல் தமிழ் ஆட்சி அமைப்பிற்காக தமிழரசுக் கழகம் தேவைப் பட்டது. கன்னடியர்களுக்கு கர்னடக சமாஜம், மகாராஷ்டிரர்களுக்கு மகாராஷ்டிர சபை, துண்டுபட்டுக் கிடக்கும் வங்கப் பகுதிகளை இணைத்து வங்காள ராஜ்யம் சிருஷ்டிக்க வங்காள சபா ஆகியவை இருப்பதுபோல், சிதைந்து கிடக்கும் தமிழ் நிலங்களை ஒன்றுபடுத்தி, 'புதிய தமிழகம்' காணப் புறப்பட்டதே தமிழரசுக் கழகம்.

## கொள்கைகள்

1. தமிழ் மக்களின் தேசீய நலன்களை காந்திய வழியில் பாது காத்தல்.

2. இந்தியக் கூட்டாட்சியில் இணைந்து வாழும் தமிழ் ராஜ்யம் ஏற்படுத்தல்.

3. தமிழரின் மொழி, கலை, பண்பாடு முதலியவற்றைக் காத்து வளர்த்தல்.

4. பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை நீக்கி சோஷலிச சமுதாயத்தை நிலை நாட்டல்.

5. சாதி வேறுபாடுகளைப் போக்கி. மதச்சண்டைகளையும் அகற்றி மக்களிடையே ஒற்மையை நிலை நாட்டல்.

இந்த ஐந்து அம்சங்களும் தமிழரசுக் கழகத்தின் அடிப்படைக் கொள்கைகள். இவை 15-3-54 ல் தலைமைக் கழகத்தின் செயற்குழுகூடி தயாரித்தது. இதற்கு முன்பு இருந்த கொள்கைகள் கழகத் தந்தை ம. பொ. சி. அவர்களின் சொந்த விருப்பப்படி அவர்களாலேயே தாயாரிக்கப்பட்டதாகும். அதுவும் கழகம் தோன்றிய 1947 ல், வெள்ளையன் கீழிருந்த அடிமை இந்தியாவில் வகுக்கப்பட்டவையாகும். 1953 ஜனவரி 24, 25 தேதிகளில் சென்னையில் நடந்த மாநில மாநாட்டிற்கு முன் பல மாவட்ட, தாலுகா, பிர்க்கா மாநாடுகள் நடந்திருந்தாலும், இந்த மாநில மாநாடுதான் மாவட்டங்கள் தோறும் கிளைக் கழகங்கள் அமைத்து, அந்தக் கிளைக் கழகங்கள் தேர்ந்தெடுத்தனுப்பிய பிரதிநிதிகளைக்கொண்டு நடத்தப்பட்ட மாநாடாகும். இந்த மாநாட்டிலேதான் முதன் முதல் தேர்தல் வழியிலே மாநாட்டுத் தலைவரும் மாநில தலைமைக் கழகத் தலைவருமாக சிலம்புச்செல்வர் ம. பொ. சி. தேர்ந்தெடுக்கப்பட்டார். இதன் பிறகு ஜனநாயக வழியில் அமைப்பிக்கபட செயற்குழுவினரால் வகுக்கப்பட்டுள்ள

கொள்கைகள்தான் மேலே சொன்ன ஐந்தும். இந்தக் கொள்கைவழியில் செயல்படும் தமிழரசுக் கழகத்தின் பணியில் கருத்து வேற்றுமை கொண்டவர்கட்கு நம் கழகம் என்னும் விளக்கம் சொல்லக் கடமைப்படிருக்கிறது.

தமிழரசுக் கழகம், கலை கலாச்சாரம் போன்ற பணிகளைச் செய்வதுடன் அரசியல் கருத்துக்களையும் தெரிவிக்கிறது. ஆனால், அது ஒரு அரசியல் கட்சியாக இதுவரையில் இல்லை. தமிழரசுக் கழகம் தன்னை அரசியல் கட்சி என்று பிரகடனப்படுத்திக் கொள்ளாததற்குக் காரணம், அரசியல் கட்சியாக இருப்பது பாவம் என்ற பயத்தாலல்ல. பதவி வகித்து நாடாள்வது குற்றம் என்ற கொள்கையால் அல்ல. தமிழகத்தின் எல்லைகளை மீட்பதும், தமிழில் ஆட்சி செய்ய வேண்டும் என்பதும் தனிப்பட்ட எந்த ஒரு கட்சிக் கொள்கையுமல்ல. தமிழின மக்கள் முழுமைக்குமாக உள்ள பொதுப் பிரச்சினை. இதை ஏதேனும் ஒரு அரசியல் கட்சி வலியுறுத்தினால், அதற்கு எதிர் மறையாகவுள்ள அரசியல் கட்சியினர் இதற்கு இப்போதென்ன அவசரம் என்று எதிர்க்குரல் கொடுப்பார்கள். அப்பொழுது அது, தமிழின மக்கள் முழுமையும் ஏற்றுக்கொள்ளவேண்டிய ஒரு பிரச்சினைக்கு தமிழ் மக்களிடமே எதிர்ப்புணர்ச்சியிருக்கிறதென்ற பழிச்சொல்லை பரப்புவதாக முடியும். பிறகு அதைக்காட்டி மத்திய ஆட்சி "உங்கள் சண்டை தீரும்வரை உங்கள் கோரிக்கையைத் தள்ளிப் போடுகிறேன் என்று தட்டிக் கழிக்க முனையலாம். உதாரணமாக தமிழ் மொழியில் ஆட்சி நடைபெற வேண்டும் என்பதை காங்கிரஸ் தமிழர்களும் ஒத்துக் கொள்கிறார்கள். ஆனால், ஆட்சி மொழி தமிழாக வரவேண்டும் என்ற தீர்மானத்தை சட்ட சபையிலே எதிர்க் கட்சிக்காரர்கள் கொண்டுவரும்போது

அது நிறைவேறுவதில்லை. காரணம் எதிர்க் கட்சிக் காரர்கள் கொண்டுவந்த கோரிக்கையை நிறைவேற்றி வைத்தால் "அது எங்களால் வந்தது" என்று அந்தக் கட்சிக்காரர்கள் பெருமைப்பட்டுக்கொள்வார்கள். இதை ஆளும் கட்சி செய்யவில்லையே என்று மக்கள் நினைப்பார்கள். அதனுல் ஆளும் கட்சிக்குச் செல்வாக்குக் குறையும். எனவே, இன நலனைவிட கட்சி நலனை முக்கியமாகக் கருதி தமிழ் ஆட்சி மொழியாக வருவது கைவிடப்படுகிறது. ஆகையினுல்தான் கட்சி சார்பற்று, மக்களின் பிரதிநிதியாக நின்று, தமிழினத்தின் பொதுக் கோரிக்கையை தமிழரசுக் கழகம் எடுத்துச் சொல்லி வெற்றி காண முயல்கிறது. தமிழரசுக் கழகம் போராட்டங்களைத் துவக்கி வெற்றி காண்கிறதென்ருல் அது தமிழின மக்களின் வெற்றியே தவிர எந்த ஒரு கட்சியின் வெற்றியுமல்ல. தமிழின நலம்பேணும் ஒரு தமிழன்—அவன் எந்த அரசியல் கட்சியாக வேண்டுமாலுைம் இருக்கலாம்—தமிழரின் உரிமைக்காக தமிழரசுக் கழக மேடையில் வந்து நின்று பேசலாம். ஆனல், இந்தியாவிலிருந்து துண்டித்து வாழ விரும்பும் குழுமட்டும் இடம் கோருவது சாத்தியமல்ல. தமிழன் என்று தன்னை ஒப்புகொள்ளும் எல்லாத் தமிழர்களின் உரிமைக்காகவும் பொது அரசியல் [கட்சி அரசியலல்ல] பேசும் கழகம் தமிழரசுக் கழகம். இதற்கு உதாரணம் வேண்டுமானல் சுதந்திரப் போராட்டம் நடத்திய காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் குறிப்பிடலாம். இந்தியா சுதந்திரம் பெருவதற்கு முன்புள்ள காங்கிரஸ், தேசீய அரசியல் (கட்சியல்ல) கழகம். அரசியல் கொள்கைகளில் பலமாறுபட்ட கருத்துடையோர்களும்—எல்லோருடைய லட்சியமும் இந்திய விடு

தலையை ஒப்புக்கொள்வதாக இருந்ததால்—காங்கிரஸில் இணைந்து வேலை செய்தனர். ஆனால், இந்திய விடுதலையை விரும்பாத ஜஸ்டிஸ் கட்சி மட்டும் காங்கிரஸுடன் இணைய முடியவில்லை. வெட்டி வாழும் எண்ணம் படைக்காத வரையில் முஸ்லிம் லீக்கூட காங்கிரஸிலிருந்தது. அதைப்போல கம்யூனிஸம் பேசுவோர், காங்கிரஸ், சோஷலிஸ்டுகள் ஆகிய அனைவரும் தமிழரசு மேடையின்மீது நின்று தமிழின நலப் பிரச்னைபற்றிப்பேசி இணைந்து பணி புரியலாம். இன்றைய தமிழரசுக் கழகத்தில்கூட காங்கிரஸ்காரர்களில் பலரும், பிரஜா சோஷலிஸ்டைச் சேர்ந்த திரு. கே. விநாயகம் எம். எல். ஏ. யும் இடம் பெற்றிருக்கிறார்கள். இதைப் போல ஆட்சி மொழி எல்லை மீட்சி ஆகிய பிரச்சினையை முன்வைத்து தமிழர்கள் அனைவரும், சாதி, சமய, அரசியல் ஆகியவைக்கு அப்பால் நின்று ஒன்றுபட்டுப் பணிபுரிய வேண்டும். அதற்கான பொது இடமே தமிழரசுக் கழகம். ஆனால், தங்களை தமிழர்கள் என்பதைவிட திராவிடர்கள் என்று சொல்லிக்கொள்வதில் அதிகப் பெருமை அடைவதாகக் கூறித்திரியும் — இந்தியாவிலிருந்து வெட்டிக்கொண்டு வாழ விரும்பும்—திராவிடத்தார்கள் மட்டும் தமிழரசுக் கழகத்தில் இணைந்து பணிபுரிய முடியாது! பலாத்காரவாதிகளுக்கும் இடமில்லை.

## தோற்றுவாய்

14-1-47-ல் (பொங்கலன்று) சென்னை செயின்ட் மேரீஸ் மண்டபத்தில் மாநில தமிழரசுக் கழகம் திரு. வி. க. அவர்களால் துவக்கிவைக்கப்பட்டது. ஆனால், 1945-ம் ஆண்டிலேயே ம. பொ. சி. தமிழரசுப் பிரச்சாரத்தை துவக்கிவிட்டார். 1946 இறுதி வரையில் கல்லூரி மாணவர்களிடை

யிலேயும், தமிழ்ப் புலவர்கள் மத்தியிலும் தமிழரசு பற்றிய எண்ணத்தை ம. பொ. சி. பரப்பி வந்திருக்கிறார்.

1947 ஜனவரியில் கழகப் பிரச்சாரத்திற்காக தமிழ் முரசு துவக்கப்பட்டது. திரு. காமராஜ் நாடார் துவக்க விழா நடத்தி வைத்தார். 9-11-47-ல் சென்னை செயின்ட் மேரீஸ் மண்டபத்தில் மாநில தமிழரசுக் கழக முதல் மாநாடு நடைபெற்றது. இம் மாநாட்டிற்கு ம. பொ. சி. அவர்கள் தலைமை வகித்தார்கள். தலைவர் பிரரேபனையை ஆதரித்து திரு. காமராஜ் நாடார் பேசினார்.

ஆரம்பத்திலிருந்து தமிழரசுக் கழகத்திற்கு ம. பொ. சி. அவர்கள்தான் தலைவர். பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் துணைத் தலைவர். 1949 ஆரம்பம் வரை கோ. மோ. ஜனார்த்தனம் பொதுச் செயலாளர். பிறகு 1952 முடியும்வரை கா. மு. ஷெரீப் பொதுச் செயலாளர்.

ஆரம்பத்தில் குறுகிய வட்டாரத்திற்குள் தோன்றிய தமிழரசுக் கழகம், தோன்றிச் சில ஆண்டுகளுக்குள் தமிழ் மக்களின் அபரிமிதமான அபிமானத்திற்கு உரித்தாகி விட்டிருக்கிறது. இப்படி மிக வேகமாக வளர்ந்துவரும் தமிழரசுக் கழகம் ஜனநாயக முறைப்படி அமைக்கப்பட்டு, கொள்கைகள் சட்ட திட்டங்கள் வகுத்து, தலைவர், உபதலைவர், செயலாளர்கள், செயற்குழுவினர் தேர்ந்தெடுக்கப்பட்டு செவ்வனே இன்று இயங்கி வருகிறது.

தலைவர் :

ம. பொ. சிவஞானம்

துணைத் தலைவர் :

தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

பொருளாளர் :

கலைஞர் தி. க. ஷண்முகம்

செயலாளர்கள் :

வே. கி. குப்புசாமி
ஆ. கொ. வேங்கடராமானுஜம்

செயற்குழு உறுப்பினர்கள் :

சின்ன அண்ணாமலை
கு. சா. கிருஷ்ணமூர்த்தி
ஜி. உமாபதி
லீலாவதி ராமசுப்பிரமணியம்
கி. ஜனார்த்தனம்
எம். ஏ. ஷம்சுதீன்
ந. சஞ்சீவி
இரா. தருமலிங்கம்
ஈ. எஸ். தியாகராஜன்
இளமான்
கவி. கா. மு. ஷெரீப்

மொத்தம் இருபத்தி ஒரு உறுப்பினர்களில் இன்னும் ஐவர் நியமிக்கப்படவில்லை.

## சட்ட திட்டங்கள்

தமிழரசுக் கழக விதிமுறைகளின் நகல் தயாரிப்பு 11-6-53-ல் செய்து முடித்து நிர்வாகக் குழுவினரின் அங்கீகாரமும் பெற்றிருக்கிறது. ஆனால், இன்னும் வெளியிடப் படவில்லை. ஆதலால் இதில் இடம் பெறமுடியாது போயிற்று !

## கொடி

தமிழினத்தின் கொடி தமிழரசுக் கொடி. இந்தக் கொடி, வில், மீன், புலி ஆகிய சின்னங்களை வெள்ளைத் துணியிலும் அடியில் பட்டையாகச் சிவப்பு வர்ணத்தையும் கொண்டிருக்கும். கொடியின் வெள்ளைப் பகுதி மூன்றில் இரண்டு பங்கு. சிவப்பு மூன்றில் ஒரு பங்கு. வில் சிறிது மேலாகவும், புலியும் மீனும் வல இடப்பக்கங்களில் சிறிதுகீழிறங்கியும் வேறுவேறு திசைகளைப்பார்த்திருக்கும். கதர் அல்லது கைத்தறி துணியில் கொடி தயாரிக்கப்பட்டிருக்கும். சொந்தக் கட்டிடங்களில் கொடி எப்பொழுதும் பறக்கவிடப்படலாம். பொது இடங்களில் விழாக் காலங்களில் காலையில் ஏற்றி மாலையில் இறக்கிவிட வேண்டும்.

தமிழரசுக் கொடி கட்சிக் கொடியல்ல. இனக் கொடி. தமிழர்களின் மூதாதையரான மூவேந்தர்களின் ஆட்சிக் கொடி. அவர்களின் சந்ததியார் நாம் என்பதைக் காட்டிக் கொள்வதற்காகவே இக் கொடியை உயர்த்துகிறோம். மதத்தால் இன்று பல பிரிவுகளாகத் தமிழினம் கூறுபோடப்பட்டிருப்பதால், நாம் அனைவரும் இனத்தால், நாட்டால், மொழியால் தமிழர்கள் என்ற உணர்வை உண்டாக்கவே இக் கொடியை நாம் உயர்த்துகிறோம். மற்றபடி எந்த கட்சிக்கும் எதிராக அல்ல. இந்தியாவின் ஆட்சிக்குட்பட்ட நாடு தமிழ் நாடு என்பதை நிலை நாட்ட அறவாளிக் கொடியை நாம் ஒப்புக்கொண்டிருக்கிறோம். அதேபோல நாம் தமிழர்கள், நம் நாடு தமிழ் நாடு என்பதை எடுத்துக்காட்ட நாம் தமிழினக் கொடியை ஏற்றி வைக்கிறோம். இந்தியா முழுமைக்கும் ஒரு கொடியிருக்கும்போது, ஜனாதிபதிக்கென்று ஒரு தனிக் கொடியிருப்பதையும் பார்க்

கிறோம். அதுமட்டுமல்ல, மாகாண கவர்னர்களுக்கும் தனிக் கொடியிருக்கிறது! இன்னும் தெய்வங்கட்கும் தனித் தனித் கொடிகள். மடங்களுக்கும், மடாதிபதிகட்கும் தனிக் கொடிகளுண்டு. ஏன் மதங்கட்கெல்லாம்கூட தனித் தனிக் கொடிகளிருக்கின்றன. இவைகளில் எதையும் இந்திய ஆட்சியோ காங்கிரஸ் கட்சியே வெறுக்கவில்லை. தனிக்கொடியிருக்கிறதென்பதற்காக இவைகளில் எதனுடனும் உள்ள உறவை வெட்டிக்கொள்ள காங்கிரஸ் விரும்பவில்லை. ஆனால் தமிழினத்திற்கென்று தனிக்கொடி கூடாதென்கின்றார்கள் சில காங்கிரஸ்காரர்கள். பாவம் இவர்களுக்கு இனமென்றால் என்ன என்றே தெரியாது. காங்கிஸ்காரர்களென்று தங்களைப்பற்றிச் சொல்லிக் கொள்வார்கள். ஆனால், கட்சிக் கொள்கை புரிந்திருக்காது! இந்தியன் என்று மார்தட்டுவார்கள். இந்திய ஆட்சி இயங்கும் முறை தெரியாது, இந்தியாவின் சரித்திரம் தெரிந்திருக்காது. தெரிந்து கொள்ளவேண்டும் எனவும் விரும்பமாட்டார்கள். நான் இன்ன மதத்தைச் சேர்ந்தவனென்பார்கள். ஆனால், அந்த மத தத்துவம் எதுஎன்றே அறிந்திருக்கமாட்டார்கள்.

"கூட்டத்தில் கூடி நின்று கூறிப் பிதற்றலின்றி
நாட்டத்திக் கொள்ளாரடி......"

என்று பாரதியார் பாடியிருப்பதைப்போல் வந்தேமாதரம் என்னும் இந்த வாய்ச்சொல் வீரர்கட்கு, 'வந்தே'யும் தெரியாது, 'மாத்ரு'வும் புரியாது! தெரிந்தால், புரிந்திருந்தால், தமிழர்களின் மாத்ரு வான தமிழ் நாட்டின் 'வந்தே' (வணக்கம்) இந்திய கூட்டாச்சிக்குத் துரோகமாகப்படாது! தமிழரசுக் கொடி இந்தியக் கொடிக்கு விரோதமானது என்று சொல்லத் தோன்றாது.

இனக்கொடி என்பது தமிழினம்மட்டும் வைத்திருப்பதல்ல. இந்தியாவில் வாழும் எல்லா மொழி வழி இனத்தாருக்கும் தனித் தனிக் கொடியுண்டு. மலேஞால இனம் சங்குக் கொடிவைத்திருக்கிறது. கன்னடிய இனத்திற்கு அனுமக்கொடி. ஆந்திரர்கட்கு இரட்டை நாகப் பாம்புக் கொடி. இதே போன்று மற்ற மற்ற இனங்கட்கும் கொடிகளிருக்கின்றன. இந்தக் கொடிகளை அந்தந்தப் பிரதேசத்தின் காங்கிரஸ்காரர்களே ஏற்றி வைத்துப் போற்றிப் புகழ்கிறார்கள். அதனால் அவர்கள் காங்கிரஸிற்கு விரோதியாகிவிடவில்லை. விரோதிகள் என்று எந்தக் காங்கிரஸாரும் சொல்லவில்லை. காங்கிரஸ் அல்லாத இதர கட்சிக்காரர்களும் தங்களின் இனக் கொடிக்கு அங்கெல்லாம் வணக்கம் செலுத்துகிறார்கள். ஆனால் தமிழகத்தில் மட்டும் தமிழரசுக் கழகத்தாரைத் தவிர்த்து, மற்ற கட்சிக்காரர்கள் கழகக்காரர்களெல்லாம் தமிழினத்தின் கொடியை மதிப்பதில்லை. அது மட்டுமல்ல கிண்டலும் செய்கிறார்கள்.

இந்தியாவை சமீப காலம் வரை ஆண்ட பிரிடீஷ்காரர்களின் கொடியான 'யூனியன் ஜாக்' தோன்றிய காலமும் வரலாறும் சொல்லுவது எளிது. அதற்கு முன்பு இங்கே வந்த முகலாய ஆட்சிக் கொடியின் தோற்றுவாயும் சொல்லிவிடக்கூடியதே! அசோகனின் அரவாளிக் கொடி என்று பிறந்ததென்பதை எழுதிவைத்திருக்கிறார்கள். கம்யூனிஸ்டு கொடியின் காலம் தெரியும். கருப்புக்கொடியின் பிறப்புப் புரியும். சோஷலிஸ்டுகளின் கொடி ஏற்பட்ட கதை தெரிந்ததே! ஆனால் தமிழினத்தின் கொடி என்று பிறந்தது? எப்படி வளர்ந்தது? என்பதை எவராலும் சொல்லமுடியாது! தமிழ் சாம்ராஜ்யம்தழைத்திருந்த காலத்திலே தரணியெங்கும் இந்தக் கொடி டால் வீசிப்பறந்ததுண்டு. இமயத்தி

லேற மூனைந்த முதல்தமிழன், அதன் பிடரியிலே தமிழினக் கொடியை பொறித்து வைத்துத் திரும்பினன். தமிழினக் கொடிபறக்கும் கப்பல்களைக் கண்டதும் பாங்கி நாட்டினர், அகமகிழ்வுடன் வணங்கி வரவேற்ற வரலாற்றினை ரோமியச் சரித்திரம் இதயத்தில் ஏந்தி நிற்கிறது! சீனம், யவனம், மிஸ்ரம் போன்ற நாடுகளின் வாழ்த்தொலியுடன், டால் வீசிப் பறந்த வரலாறு பெற்ற கொடி தமிழினக் கொடி! கட்சிக் கொடி தன் கட்சிக்காரர்களுக்காகவே பறக்கிறது! மதக் கொடி தன் மதத்தினருக்காகவே பறக்கிறது. ஆட்சிக் கொடி தன் ஆட்சிக்காகவே பறக்கிறது. ஆனால், இனக் கொடியோ கட்சி மாறினாலும், மதம் மாறினாலும், ஆட்சி மாறினாலும் தான்மாறாமல் பறந்துக்கொண்டேயிருக்கிறது! எனவே இந்துவாக ஆகிவிட்ட தமிழருக்கும், இஸ்லாமிய ராக இயங்குகின்ற தமிழருக்கும், கிருஷ்துவ தமிழருக்கும் உள்ள மதப் பூசல்களைக் களைந்து, இன உணர்ச்சியை எழுப்ப தமிழினக் கொடியை ஏந்திச் செல்கின்றனர் தமிழரசுக் கழகத்தினர். அவர்கள் எழுப்பும், "தமிழினமே ஒன்றுபடு" என்ற இனிய கீதத்தின் இசை முழக்கங் கேட்ட மாத்திரத்தில், கட்சிக் காழ்ப்புக்கள் கருகி மடிகின்றன. இன வளர்ச்சிப் பயிர் அந்தக் கருகிய சாம்பலை உரமாகக்கொண்டு ஓங்கி வளர்ந்து செழிக்கின்றது! வாழ்ந்த இனத்தின் வாழ்வைப் புதுக்க இனக் கொடி சுமந்து ஏறுபோல் நடக்கின்றனர் தமிழரசுப் படையினர். கன்னியாகுமரி கடலிலே மூழ்கி கரையிலே கொடி நட்டு, கடுகி நடக்கும் தமிழரசுப் படை வீரர்கள் வரும் வழியெல்லாம் வரவேற்பளிக்கிறார்கள் தமிழ் மக்கள்.

"தமிழரசு கொடு!
தமிழை அரியணையேற்று!

சமதர்ம ஆட்சி நடு!
தமிழினமே ஒன்றுபடு!
ஓங்குக சோஷலிசம்!"

என்று எக்காளமிட்டுச் செல்லும் இப்படை, வேங்கடத்தில் கொடி நட்டு, இது எங்களின் வடக்கெல்லை என்ற உரிமையை நிலைநாட்டி, உறவு நாடி இமயம் நோக்கிச் செல்லும். அப்படிச் செல்லும் தமிழரசுப் படை, கையில் ஏந்திச் செல்லுவது தமிழினக் கொடி! வாய் இயம்பிச் செல்லும் சொற்களோ—

"நாங்கள் தமிழர்கள்!
எங்கள் நாடு தமிழ் நாடு!
எங்கள் மொழி தமிழ் மொழி!
உரிமைக்கு எல்லை வேங்கடம்!
உறவுக்கு எல்லை இமயம்!"

என்பதாக இருக்கும். இப்படியே இந்திய தேசிய இனங்கள் அனைத்தும் தத்தமது இன முழக்கத்துடன் கொடியேந்தி நடந்துவரும். எல்லோரும் ஒன்று கூடுவோம். அனைவருடைய கொடிகளும் இமயமலை சிகரத்திலே பொறிக்கப்படும். பொறித்ததும், நாடு காக்க வீரர்கள் ஊர் திரும்புவர். இவர்களிலே இனத்திற்கொருவரென்று பொறுக்கி எடுத்து, இந்திய நாட்டின் பெருமை சொல்ல இமயத்திற்கு அப்பாலும் அனுப்பப்படுவர். அப்பொழுது இந்திய மக்களின் கூட்டுப்படை, கையில் ஏந்திச்செல்லும் கொடியினக் கொடியாக இருக்காது! இந்திய தேசியக் கொடியாக இருக்கும். அறவாழி பொறித்த அக் கொடியைக் கையிலேந்தி வெளிநாடு செல்லும் படையின் முழக்கமும் இன முழக்கமாக இருக்காது. இந்தியாவின் நலம், வளம், புகழ் பரப்பும் பொது முழக்கமாக இருக்கும்.

"நாங்கள் இந்தியர்கள்.
எங்கள் உரிமைத் தாயகம் இந்தியா.
எங்களின் உறவுத் தாயகம் உலகம்.
எங்களின் லட்சிய கீதம் சோஷலிசம்"

இப்படி முழங்கி ஒன்றுபட்டு வாழ்வோம் ஒரே குடும்பமாக! நட்புக் கெடாமல் உலகத்துடன்—உறவு கெடாமல் இந்தியாவுடன்—உரிமை கெடாமல் தமிழர்களாக!

தமிழரசுத் தொண்டர்கள் தமிழின துவஜத்தை கையிலேந்தும்போது ஏற்கும் உறுதிப்பாடு இது! ஆனால், இன நலம் தெரியாத மாரீசர்கள், இனக் கொடியை கருவாட்டுக் கொடி என்பார்கள். இன நல மறிந்த தமிழ் இளைஞர்களோ—

"உரிமையை நிலைநாட்ட எங்களின் ஜடலங்களை படியாக்கி, அதன் வழியே ஏறியேனும் வேங்கடத்தின் உச்சியிலே உயர்த்தியே திரும்புவோம் தமிழ் இனக் கொடியை, இது உறுதி! உறுதி !! உறுதி !!!"

என்று எக்களாமிட்டுச் சொல்லுகின்றனர். இளைஞர்களின் இடியோசை போன்ற இந்தச் சொல்லோசை கேட்டு, 'கட்சிப் பாம்புகள்' செத்து விழுகின்றன. சாகும் நேரத்திலும் சீறிப்பாய நினைக்கின்றன. அதன் விளைவாக பல இடங்களிலே தமிழினக் கொடியை கருஞ்சட்டையினர் களவாடிச்செல்லும் கயமைச் செயல் நடந்ததுண்டு. கள்ளக்குறிச்சி போன்ற இடங்களிலே காங்கிரஸ்காரர்களே தமிழரசுக் கொடியை பறக்கவிடக்கூடாதென்று இறக்கிக் கிழித்தெறிய முனைந்ததுண்டு. ஆனால் கொடிப் போரில் குமணனின் நேர் வாரிசார் தமிழரசுக் கழகத்தினர் என்பது தெரிந்ததும், கால்தெறிக்க ஓடியதும் உண்டு. இப்படி லட்சி

யத்தில் வளர்ந்து, லட்சியத்திற்காகவே வாழ்ந்து வரும் தமிழினக் கொடியே தமிழரசுக் கழகத்தினர் கைப்பிடித்திருக்கும் கொடி!

## வேலைத் திட்டங்கள்

தமிழரசுக் கழகம் தனது கொள்கைகளை சாத்வீக வழியில், பேச்சுரிமை சொல்லுரிமைப்படி கலை, கலாச்சாரம், சரித்திரம், இலக்கியம் பற்றிய ஆராய்சிகளும், பிரச்சாரங்களும் நடத்தி: மாநாடு, பத்திரிகை, நாடகங்கள் வாயிலாகப் பிரச்சாரம் செய்து வருகின்றன.

## கலாச்சாரப் பணி

தி. க. ஷண்முகம், நால்வர் நாகராஜன் போன்ற சினிமா கலைஞர்களும், கவிஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி, உசிலை சோமநாதன் போன்ற நாடக ஆசிரியர்களும், ஐயம் பேட்டை மாரிமுத்து, உசிலை எழுச்சிக் கனல் நாடகக் குழுவினர் போன்ற பிரச்சார நாடக நடிகர்களும் நாடகக் கலையின்மூலம் கலாச்சாரப் பணி புரிகின்றனர்.

## இலக்கியப் பணி

சிலப்பதிகார ஆராய்ச்சியாலும், சிலப்பதிகார மாநாடுகள் நடத்தியதின் வாயிலாகவும் தமிழகத்தில் மட்டுமல்ல யாழ்ப்பாணம்போன்ற பிற இடங்களிலும் கண்ணகியின் கற்பும் சிலப்பதிகார இலக்கியப் பெருமையும் பேசப்படும்படி செய்தவர்கள் தமிழரசுக் கழகத்தினர். குறிப்பாக, ம. பொ. சி. அவர்கள்.

## வரலாற்றுப் பணி

சிப்பாய்க் கலகம் என்று வெள்ளையர்கள் பெயரிட்டழைத்த முதல் சுதந்திர யுத்தம் தோன்றுவதற்கு அரை

நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழகத்தில் வெள்ளையன் எதிர்ப்புத் துடங்கிவிட்டதென்ற வரலாற்றையும், அதைத் துவக்கிய கட்டப்பொம்மனையும், மறந்துவிட்டவர்களுக்கு நினைவுபடுத்தி, நூலெழுதி, விழாக்கொண்டாடி, தமிழரின் பெருமைமிக்க வரலாற்றை எடுத்துத் தந்தார் ம. பொ. சி.

கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி.யை, கன்னித் தமிழர்கள் முன்பு உலாவவிட்டிருக்கும் பெருமையும் தமிழரசுக் கழகத் தலைவரைச் சார்ந்ததே !

சுபாஷ் சந்திரபோஸிற்கு போர்த்திட்டம் போட்டுக் கொடுத்த தமிழ் வீரனாகிய செண்பகராமன் வாழ்க்கையை விளக்கி, வீரவாலிபர்களின் நரம்புகளிலே முறுக்கேற்றி வைத்ததும் தமிழரசுக் கழகமே. எழுதியவர் கவிஞர் வனம்பாடி.

இன்னும் தி. மு. க.களின் தில்லுமுல்லுத்தனங்களை வெளியாக்க எழுதப்பட்ட நூல்கள் பலப்பல. இதற்காகப் பணிபுரிந்த பத்திரிகைகளும் பிரசுராலயங்களும் எழுத்தாளர்களும் பல எல்லாம் தமிழரசுக் கழகத்தாரின் ஏடுகளும் எழுத்தாளர்களும்தான் ! இதனால் திருந்திய திராவிட இளைஞர் பல ஆயிரம் பேர்.

## மாநாடு பொதுக்கூட்டங்கள்

பொதுப்படையாகச் சொல்வதென்றால் தினம், ஒன்றுக்கு மேற்பட்ட கூட்டங்களும், பத்து நாளைக்கு ஒரு மாநாடு வீதமும் வருமளவிற்கு மாநாடுகளும் கூட்டங்களும் நடத்தி, கழகப் பிரசாரம், கலை, கலாச்சாரப் பிரசாரமும் செய்திருக்கிறது தமிழரசுக் கழகம். இந்தப் பணியிலே ஈடுபட்ட பிரசாரகர்களின் பட்டியலைக் கணக் கொடுத்தால் நீண்டுவிடும் என்ற காரணத்தால் எழுதவில்லை.

## போராட்டங்கள்

தமிழரசுக் கழகம் நடத்திய—கலந்துகொண்ட—போராட்டங்கள் பலப்பல. அவைகளில் முக்கியமானவை

இந்தி எதிர்ப்பு
தலைநகர்ப் போராட்டம்
எல்லைப் போராட்டங்கள்.

## வெற்றி பெற்றது

இந்தப் போராட்டங்கள் அனைத்திலும் தமிழரசுக் கழகம் வெற்றியே கண்டது.

## ஏன் இந்தப் போராட்டங்கள்?

ஆட்சி நடத்தவேண்டும் என்ற ஆசையினாலோ, ஆளும் கட்சியை தொலைத்துவிடவேண்டும் என்ற எண்ணத்தினாலோ இந்தப் போராட்டங்களில் தமிழரசுக்கழகம் ஈடுபடவில்லை. தமிழ்த் தேசிய இனத்தின் நலனுக்காக—மூன்று கோடித் தமிழர்களின்—உரிமைக்காக, வாழ்விற்காக, அரசியல் நோக்கங்கள் எதுவுமின்றி தேசிய அடிப்படையில் இந்தப் போராட்டங்களில் தமிழரசுக் கழகம் கலந்து போராடி வெற்றிப்பெற்றிருக்கிறது. பெற்ற வெற்றிகளை கழக வெற்றி என்று தமிழரசுக் கழகத்தினர் பிரித்து பேசுவதில்லை. தமிழர்களின் வெற்றி என்றே குறிப்பிட்டு மகிழ்வடைகின்றனர்.

## இந்தி எதிர்ப்பு

"இந்தி எதிர்ப்பில் ஈடுபடுவதுபோல் நடித்து இடை வழியில் துரோகம் புரிந்து ஓடிவிட்டனர் தமிழரசுக் கழகத்தார்"

என்று திராவிடத்தார் கூறுகின்றனர். காங்கிரஸ் வட்டாரத்திலோ—

"திராவிடத்தார்களுடன் கலந்துக்கொண்டு இந்தி எதிர்ப்பின் பெயரில் காங்கிரஸ் ஆட்சிக்குத் தொல்லை கொடுத்தனர் தமிழரசுக் கழகத்தார்"

என்று புரியாத சில இளவெட்டுக்கள் பேசித் திரிகின்றனர். இந்த இரண்டு கூட்டத்தார்களின் கூற்றுக்கும் உண்மை நிகழ்ச்சிக்கும் எவ்விதச் சம்பந்தமுமில்லை.

## என்ன நடந்தது?

1948-ல் நமது ராஜ்ய கல்வி மந்திரியாக இருந்த அவிநாசிலிங்கம் செட்டியார், தமிழ் நாடு காங்கிரஸ் கட்சியையோ, காங்கிரஸ் பார்லிமெண்டு கட்சியையோ, சக மந்திரிகளையோ, கல்வி அதிகாரியையோ கேட்டுக் கலந்தாலோசனை செய்யாமல் இந்தியைக் கொண்டு வந்தார். அதுவும் இஷ்டப் பாடமாக அல்ல, கட்டாயப்பாடமாக. முன்னமேயே தமிழ், ஆங்கிலம் ஆகிய இரண்டு மொழிகளைக் கட்டாயப் பாடமாகப் படித்துக் கொண்டிருக்கும்—முதல் படிவத்திலிருந்து மூன்றும் படிவத்திற்குட்பட்ட—இளம் பிள்ளைகள் தலையில், மூன்றாவதாக ஒரு மொழி கட்டாயமாகத் திணிக்கப்படுமானல், பிள்ளைகளால் கல்வி பயில முடியாதென்பதை தமிழரசுக் கழகம் நன்கு உணர்ந்தது. எனவே கட்டாயப்பாடமானல் வயது வந்த மாணவர்கள் படிக்கின்றாற்போல் நான்காம் படிவத்திலிருந்து ஆரம்பிக்க வேண்டும். இஷ்டப்பாடமெனில் எந்தப் படிவத்திலிருந்து வேண்டுமானாலும் துவக்குவதில் ஆட்சேபனை இல்லை என்ற கருத்தை தலைவர் ம. பொ. சி. தெரிவித்தார். இந்தச் சம

யத்திலே சென்னையிலுள்ள திருவள்ளுவர் கழகம் ஒன்று, சென்னை செயின்ட் மேரிஸ் கட்டிடத்தில் இந்தி எதிர்ப்பு சர்வகட்சிக் கூட்டம் ஒன்றை கூட்டிற்று. இது எந்த ஒரு கட்சிக்காரர்களாலோ, அல்லது கட்சியின் ஆதரவிலோ கூட்டப்பட்டதல்ல. இந்தக் கூட்டத்திற்கு காலம் சென்ற தமிழ்ப் பெரியார் திரு. வி. க., மறைமலை அடிகள் ஆகிய தமிழ் விற்பன்னர்களை அழைத்ததுபோல், திராவிடக் கழகத்தைச் சேர்ந்த ஈ. வெ. ரா., அண்ணாத்துரை ஆகியவர்களையும் அழைத்திருந்தனர். தலைவர் ம. பொ. சி. அவர்களையும் கலந்துகொள்ளவேண்டுமெனக் கேட்டனர். அனைவரும் கலந்துகொண்டு தத்தமது அபிப்பிராயத்தையும் வெளியிட்டனர். அதன்பிறகு சர்வகட்சி இந்தி எதிர்ப்புக் கமிட்டி என்று ஒன்று நிறுவப்பட்டது. அந்தக் கமிட்டியில் மேலே கண்ட தலைவர்கள் அனைவரும் ஆரம்பத்தில் அங்கத்தினராக இருந்தனர். அடுத்து, அந்தக்கமிட்டிகூடி இந்தி எதிர்ப்புப்பற்றிய திட்டம் தயாரித்தது. அதில் ம. பொ. சி. அவர்கள் கொண்டுள்ள—இந்தியை இஷ்டபாட மாக்கல், அல்லது கட்டாயப்பாடமெனில் நான்காம் படிவத்திலிருந்து ஆரம்பித்தல்—என்ற கருத்துத்தான் போராட்டத்தின் இறுதி லட்சியமென்றும், இதற்காக, எழுத்து பேச்சு உரிமைகளைக்கொண்டு சாத்வீக வழியில், காந்திய நெறியில் போராடுவதென்றும் தீர்மானமாயிற்று. இது சில 'திராவிட 'மாவீரர்'கட்குப் பிடிக்கவில்லை. அவர்களின் பழக்கப்படி பள்ளி மறியல், காங்கிரஸ் எதிர்ப்பு, பார்ப்பன எதிர்ப்பு, வடவர் எதிர்ப்பு ஆகிய போக்கில் இந்தி எதிர்ப்பை நடத்த முடிவு கட்டினர். இதற்கு சர்வகட்சி ஒத்துவராதாகையினால், தங்கள் சொந்தப் பொறுப்பிலேயே இந்தி எதிர்ப்பை நடத்தப் போவதாகவும் தமிழரசுக் கழகம் தனது கொள்கை

வழியில் தனித்து இந்தியை எதிர்க்குமென்றும் விடுதலையில் அவர்களே அறிக்கை வெளியிட்டுவிட்டு போராட்டத் திற்குத் தயாராகிவிட்டனர். சர்வகட்சி இந்தி எதிர்ப்புப் போய், தனிப்பட்ட கட்சி இந்தி எதிர்ப்பு ஆரம்பமாகிற்று. திராவிடத்தார்கள் தனித்து போராட்டம் துவக்கி இந்தி ஒழிக என்றார்கள். தமிழரசுக் கழகம் போராட்டம் துவக்கி கட்டாய இந்தி வேண்டாமென்றது. அவர்கள் இந்தி திராவிட நாட்டுக்குள் நுழையவே கூடாதென்றார்கள். நாம் இந்திமட்டுமல்ல எந்த பாஷை வேண்டுமானாலும் வரட்டும். ஆனால், இஷ்டப் பட்டோர் மட்டும் படிக்கவேண்டுமே தவிர கட்டாயப் படுத்தக்கூடாதென்றோம்.

இந்தி இந்தியாவின் பொதுமொழி என்பதை காங்கிரஸ் மகாசபை ஒப்புக்கொண்டிருக்கிறது. இந்திய அரசியல் சட்டத்திலும் இடம் பெற்றிருக்கிறது. காங்கிரஸை தாய்ச் சபையாக ஏற்றுக்கொள்ளும் தமிழரசுக் கழகம்—இந்திய கூட்டாட்சியில் இணைந்து வாழ ஒப்புக்கொண்டு தமிழ் நாடு கேட்கும் தமிழரசுக் கழகம்—இந்தி ஒழிகக் கூப்பாடு போட்டவர்களின் கருத்து வழி நடக்கமுடியாது! ஆகவே, கட்டாய இந்தி வேண்டாமென சாத்வீகப் போராட்டத்தின் மூலம் தன் கருத்தை ஆட்சியாளருக்கு அறிவுறுத்திற்று.

## நடவடிக்கைகள்

தமிழரசுக் கழகத்தின் சார்பில் இந்தி எதிர்ப்புக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

அந்தக் கமிட்டியின் சார்பில் போராட்டத் தலைவராக தமிழரசுக் கழகப் பொதுச் செயலாளராக இருந்த கொ. மோ. ஜனார்த்தனம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

போராட்டத் தலைவர் கொ. மோ. ஜனார்த்தனம் தலைமையில் தமிழரசுக் கழகத்தைச் சேர்ந்த 21 பேர் 20-8-48 வெள்ளிக்கிழமை காலை சென்னை அசெம்பிளி மண்டபத்தின் வாயில் முன்பு நின்று இந்தி எதிர்ப்புக் கோஷங்களைச் செய்தனர். தமிழரசுக் கொடியுடன் கட்டாய இந்தி வேண்டாம்' என்று எழுதப்பட்ட அட்டைகளை ஒவ்வொருவரும் கைகளில் தாங்கியிருந்தனர். எல்லோரும் கதர் ஆடை அணிந்திருந்தனர். இருவர் கதர்க் குல்லாய்களும் அணிந்திருந்தனர். இந்திஎதிர்ப்பாளர்கள் முற்றுகையிட்ட நேரத்தில், அசெம்பிளி நடவடிக்கை நடந்துகொண்டிருந்தது. ஆனால், அரசாங்கக்கோட்டையை அதிரச்செய்த அந்த இந்தி எதிர்ப்பு கோஷங்களை கேட்டதும், பெருவாரியான அசெம்பிளி அங்கத்தினர்கள் மண்டபத்திலிருந்து வெளியேறி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். இதனால் அரை மணி நேரம் அசெம்பிளி நடவடிக்கை தடைப்பட நேர்ந்தது. அரசாங்க சிப்பந்திகளும் பொது மக்களுமாக ஏராளமான பேர் அங்கு கூடிவிட்டனர். உடனே சார்ஜெண்ட்டும் போலீஸ்காரர்களும், வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மக்கள் கூட்டத்தை வெளியேற்றிவிட்டனர். தமிழ் நாட்டுச் சட்டசபை அங்கத்தினர்களை நோக்கி, "கட்டாய இந்தியை நீக்க முயலுங்கள்; இல்லையேல் ராஜினமா செய்யுங்கள்" என்று நமது இயக்க வீரர்கள் கோஷித்தனர். 11 மணியிலிருந்து 1 மணிவரை தொண்டர்கள் இந்தி எதிர்ப்புக் கோஷங்களை முழங்கிய வண்ணமிருந்தனர். சரியாக ஒரு மணிக்கு அசெம்பிளிக்கூட்டம் கலைந்ததும், கல்வி அமைச்சரின் அழைப்பின்பேரில் திருவாளர்கள் கொ. மோ. ஜனார்த்தனம், மு. இராமலிங்கம், மு. வேணுகோபால் ஆகிய

மூவரும் அமைச்சரைப் பேட்டி கண்டு கட்டாய இந்தி உத்தரவை மாற்ற வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தினர். அவர்கள் கூறியதைப் பொறுமையுடன் கேட்டுப் பின் அமைச்சர் பதிலளித்தார். சுமார் அரைமணி நேரத்திற்குமேல் இந்தப் பேட்டி நடைபெற்றது. பின்னர் இந்தி எதிர்ப்புச் சுலோகத்தை மீண்டும் கோஷித்துக்கொண்டே அரசாங்கக் காரியாலயத்தைவிட்டு நமது படையினர் வெளியேறினர்.

## மறியலில் கலந்து கொண்டவர்கள்

சென்னை :

கோ. மோ. ஜனார்த்தனம் (போராட்ட தலைவர்), ராயபுரம் ம. ரா. சந்திரன்.

புதுக்கோட்டை (திருச்சி):

கு. சா. கிருஷ்ணமூர்த்தி, க. நாராயணன்.

மதுரை :

மு. இராமலிங்கம், ச. சுப்பிரமணியம்.

திருப்பத்தூர் (வ. ஆ.):

மு. வேணுகோபால்.

திருவத்திபுரம் :

ச. வே. கணேசன், அ. கோ. தெட்சணாமூர்த்தி, கோ. க. கன்னியப்பன், க. சிவசங்கரன், சா. த. சிவப்பிரகாசம், மா. மு. சின்னு.

கள்ளக்குறிச்சி (தெ. ஆ.)

கி. ஜனார்த்தனம், மு. நடேசன், பி. ராமமூர்த்தி, நா. தமிழன்பன்.

திருவள்ளூர் (செங்கற்பட்டு)

ஜே. வேணுகோபால், வே. விநாயகம்.

சேலம் :

இரா. தருமலிங்கம், மா. கோபாலன்.

## செயலாளர் அறிக்கை

தமிழரசு கிளைக் கழகங்களுக்கும், கழக அன்பர்களுக்கும், தலைமைக் கழகச் செயலாளர் திரு. கொ. மோ. ஜனார்த்தனம் அறிவித்ததாவது—

தோழர்களே !

அரசாங்கம் கட்டாய இந்திக் கொள்கையை எதிர்த்துத் தலைமைக் கழகம் மேற்கொண்டுள்ள நடவடிக்கையை நீங்கள் அறிவீர்கள். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை நடத்தும் பொறுப்பைத் தலைமைக் கழகம் என்னிடம் ஒப்படைத்துள்ளது.

கடந்த 20-8-48-ல் நேரடி நடவடிக்கைக் குழுவினர் அசெம்பிளிக் கட்டடத்தின் முன்பு கட்டாய இந்தியை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்தனர். அந்த ஆர்ப்பாட்டத்தின் நோக்கம் கட்டாய இந்திக்கு வாக்காளர்களிடையே உள்ள எதிர்ப்பை அசெம்பிளி அங்கத்தினருக்கு உணர்த்துவதேயாகும். "கட்டாய இந்தியை நீக்க முயலுங்கள் ; அல்லது பதவியைவிட்டுவெளியேறுங்கள்" என்று அசெம்பிளி அங்கத்தினர்களைப் பார்த்துக் கோஷம் செய்தனர்.

இதன் விளைவாகக் கல்வி அமைச்சர், என்னையும் தலைமைக் கழக செயற்குழு உறுப்பினர்களான மதுரை திரு. மு. ராமலிங்கம், திருப்பத்தூர் மு. வேணுகோபால் ஆகியோரையும் அழைத்துப் பேசினார். அப்போது, தமிழகத்

தில் கட்டாய இந்தி கூடாது என்று கூறுவதற்கான காரணங்களைத் தெளிவாக விளக்கினோம். எனினும், அமைச்சர் எங்களுக்குத் திருப்திகரமான பதில் அளிக்கவில்லை. மேலும், அரசாங்கத்தார் தங்கள் பிடிவாதத்திலிருந்து மாறுவார்களென்பதற்கான அறிகுறிகளும் இதுவரை தோன்றவில்லை.

எனவே, நாம் ஒரு நீண்டகாலப் போராட்டத்துக்கு நம்மைத் தயார் செய்துகொள்ள வேண்டும். இதனால் என்ன நேரினும் சரி, தமிழகத்தில் சிறு பிள்ளைகளுக்கு இந்தி கட்டாய பாடமாக இருக்கும்வரை நாம் நமது எதிர்ப்பை நிறுத்தப்போவதில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மறுபடியும் ஒரு தொடர்ந்த தீவிரமான நடவடிக்கையில் இறங்கு முன்னர், நாம் நம்மைப் பலப்படுத்திக் கொள்ள வேண்டும். தமிழரசுக் கழகம் எந்தக் கண்ணோட்டத்துடன் இந்தியை எதிர்க்கிறதென்பதைத் தெளிவாகப் பிரசாரம் செய்யவேண்டும். சூழ்நிலையை வைத்துக் கொண்டு நம் கழகத்தின்மீதும் நமது கழகத் தலைவர்மீதும், செய்யப்பட்டுவரும் பொய்ப் பிரசாரங்களுக்கும் தக்க பதிலளிக்க வேண்டும்.

எனவே, ஆங்காங்குள்ள கிளைக் கழகங்கள் பின்வரும் திட்டப்படி செயலாற்றுமாறு வேண்டுகிறேன்.

1. ஒவ்வொரு ஊரிலும் எதிர்ப்புக் குழு அமைத்து, தொடர்ந்த போராட்டத்துக்குத் தயாராக உள்ள தொண்டர்களின் பட்டியலைத் தயாரித்து, தலைமைக் கழகத்துக்கு அனுப்ப வேண்டும்.

2. கட்டாய இந்தியை எதிர்த்து, பொதுக் கூட்டங்கள் ஊர்வலங்கள் நடத்த வேண்டும். நியாயமற்ற வகையில் இந்த நடவடிக்கைகளுக் குத் தடை விதிக்கப்படுமானல், (தலைமைக் கழக உத்தரவுபெற்று) பிரஜா உரிமையை நிலைநாட்ட அத்தடைகளை மீற வேண்டும்.

3. இந்தி கட்டாய பாடமாக இருந்துவரும் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களிடமிருந்தும் அவர்கள் பெற்றோர்களிடமிருந்தும் கட்டாய இந்தியைத் தக்க காரணங்களுடன் எதிர்த்து அதை மாற்றும்படிக் கோரும் விண்ணப்பப் பத் திரங்களில் கையெழுத்து வாங்கி அரசாங்கத் திற்கு அனுப்பி, அதன் நகலை தலைமைக் கழகத் திற்கு அனுப்ப வேண்டும்.

பொதுக்கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து தலைமைக் கழகத்திற்கு எழுதினல் சொற்பொழிவாளர்களை அனுப்ப வசதியாக இருக்கும்.

தோழர்களே!

மீண்டும் கூறுகிறேன். நமது பிரசாரம் தீவிரமாகவும், மின்னல் வேகத்திலும் நடைபெற வேண்டும்.

இந்த அறிகையின்படி தமிழரசுக் கழகம். உள்ள எல்லா இடங்களிலும் கூட்டம் போட்டு தீர்மானங்கள் செய்து அரசாங்கத்திற்கு அனுப்பட்டன. போராட்டத் தலைவரின் வேண்டுகோளின்படி மற்ற நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன. நாம் விரும்பியபடி இந்தி இஷ் டப்பாடமாக மாற்றப்பட்டது. ஆனல், இந்தி ஒழிகக் கூப்பாடு போட்ட திராவிடக் கழகத்தினர்—இந்தி ஒழியா

மல் இஷ்டப்பாடமாக ஆக்கப்பட்டிருந்தும் இளைஞர்களை ஏமாற்ற எண்ணி இந்தி ஒழிந்து விட்டதாகச் சொல்லி விழாக் கொண்டாடினர்!

அடுத்து அவிநாசிலிங்கம் கல்வி மந்திரிப் பதவியிலிருந்து விலகினார். மாதவமேனன் அந்தப் பதவிக்கு வந்தார். அவர், "இந்தி மட்டும் இஷ்டப்பாடமல்ல—ஆங்கிலம் நீங்கலாக தமிழ் உள்பட மற்ற இந்திய பாஷைகள் அனைத்துமே இஷ்டப்பாடம்தான் என்று, 1937க்கு முன்புள்ள வெள்ளையன் ஆட்சி நடத்தியது போன்ற திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தார். தமிழுக்குப் பாடுபட்டதாக—தமிழ் வளர்ச்சிக்காக இந்தியை எதிர்த்ததாக—இன்றும் எதிர்ப்பதாகச் சொல்லிகொள்ளும் திராவிடத்தார்கள், மாதவமேனனின் தமிழ் ஒழிப்புக் கல்வித் திட்டத்தை எதிர்க்கவில்லை! கோவையில்கூடிய தமிழ் வளர்ச்சி மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றி, ம. பொ. சி. உள்ளிட்ட பல தமிழ் அறிஞர்கள். "தமிழகத்தில் தமிழ் கட்டாயப்பாடமில்லையெனில் சத்தியாக்கிரகம் தொடங்கப்படும்" என்று சர்க்காருக்கு அறிவித்தபின்பே தமிழ் கட்டாயப்பாடமாக ஆக்கப்பட்டது. இதில் திராவிடக் கழகத்தார் ஒருவர்கூட ஒத்துழைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ரயில்வே ஸ்டேஷன்களில் உள்ள இந்திப் பெயர்களை அழிக்கவாவில்லை என நம்மைக் குறைகூறித்திரியும் திராவிடத்தோழர்கள் சிந்திக்கவேண்டும். தமிழிற்கு ஆபத்தென்றபோது போரிட்டு அகற்றிய பெருமை தமிழரசுக் கழகத்திற்கு உண்டு. வெறும் ஆர்ப்பாட்டங்கள் செய்ததை தவிர வேறு எந்தப் பெருமையும் திராவிடத்தார்கட்குக் கிடையாது! இதைப் போன்றவைகளே மற்ற எல்லாமும். தமிழகத்

தின் தலை நகரான சென்னையை ஆந்திரர்கள் தட்டிக் கொண்டுபோக எண்ணி எடுத்த நடவடிக்கைகள் அனைத்தையும் முறியடித்து தமிழர்கட்கு வெற்றி தேடித்தந்த பெருமை தமிழரசுக் கழகத்தையே சாரும்.

## தலைநகர் போராட்டம்

14-10-45-ல் 'கல்கி'யில் ராஜாஜியின் தலைமை காங்கிரசுக்கு வேண்டுமென்று தாம் கூறுவதற்கான காரணங்களை விளக்கி திரு. ம. பொ. சி. ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதில், "விரைவில் மொழிவாரியாக மாகாணங்கள் பிரிக்கப்படுமல்லவா? அப்போது தமிழ் நாட்டின் எல்லை (சென்னை நகரம் உள்பட) வடவேங்கடம் முதல் தென் குமரி வரை என்று முடிவு செய்யப்பட வேண்டும். அதற்கு ராஜாஜியின் தலைமை மிகமிக அவசிய"மென்று அவர் குறிப்பிட்டிருந்தார். சென்னை நகரை பாதுகாக்க ராஜாஜி எடுத்துக்கொண்ட பெருமுயற்சி அன்று ம.பொ.சி. கூறியதை உறுதிப்படுத்தி விட்டது.

14-1-46-ல் தமிழரசு கோரும் மாணவத் தமிழர் சார்பாக கோகலே மன்றத்தில் திரு. ம. பொ. சி. தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ராஜாஜி, கே. காமராஜ், ப. ஜீவானந்தம் முதலியோர் சொற்பொழிவாற்றினர். அன்றுதான் திரு. ம. பொ. சி. தலைமையில் சென்னை நகரப் பாதுகாப்பு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது 'சென்னை தமிழருடையதே' என்று அச்சடிக்கப்பட்ட பாட்ஜுகள் தமிழரசு இயக்க மாணவர்களால் நகரெங்கும் விற்கப்பட்டன.

1-4-47-ல் சென்னையை ஆந்திரத்துக்கும் தமிழகத்துக்கும் பொது நகராக்கிவிடலாமென்று இந்திய அரசியல் நிர்ணய மன்றத்தின் ஆலோசனையாளராக இருந்த பி. என். ராவ் அபிப்பிராயம் கூறியபோது அதை எதிர்த்து, 'தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்' என்று 'தமிழ் முரசி'ல் தலையங்கம் எழுதினார் திரு. ம. பொ. சி. இந்தத் தலையங்கம் தமிழ் மக்களிடையே விழிப்பை உண்டாக்கியது. பி. என். ராவின் அபிப்பிராயத்தை ஆட்சேபித்து தமிழரசுவாதிகளால் தமிழகமெங்கும் பொதுக்கூட்டங்களும், ஊர்வலங்களும் நடத்தப்பட்டன.

1-6-47-ல் சென்னை தேனாம்பேட்டையில் கூடிய தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில், 'சென்னை தமிழருடையதே' என்பதை உறுதிப்படுத்தும்—தமிழ் மாகாணப் பிரிவினை கோரும்—தீர்மானம் முதன் முறையாக திரு. ம. பொ. சி.யால் பிரேரேபிக்கப்பட்டு ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. இதுபோன்ற ஒரு தீர்மானம் மாகாண காங்கிரஸில் இதற்கு முன்பு நிறைவேற்றப்பட்டதில்லை.

1-11-47-ல் ஆந்திரர்கள் விரும்பும் காலம் வரையில் ஆந்திர அரசுக்கு சென்னை நகரில் இடந்தர வேண்டுமென்று தமிழக—ஆந்திர கம்யூனிஸ்டுகள் கூட்டறிக்கை விடுத்தனர். இதைத் தமிழரசுக் கழகம் கடுமையாக எதிர்த்தது. ஆந்திர அரசு தற்காலிகமாகவும் சென்னையில் இருக்கக் கூடாதென்று 'தமிழ் முரசு' முழங்கியது. இதனால் ம. பொ. சி.-க்கும் தமிழக கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் 'முரசு'—'ஜனசக்தி' மூலம் தொடர்ந்து கடுமையான வாதப்போர் நடைபெற்றது.

13-9-48-ல் திரு. ம. பொ. சி. தார் கமிஷன் முன்பு சாட்சியம் அளிக்கையில் சென்னைப் பிரச்னையில் முடிவு காண எல்லைக் கமிஷன் அமைப்பதை தமிழரசுக் கழகம் எதிர்ப்பதாகவும் மீறி கமிஷன் வந்தால் கருப்புக் கொடி காட்டி பகிஷ்கரிக்கப்படும் என்றும் எச்சரித்தார். சில தமிழ்த் தலைவர்கள் எல்லைக் கமிஷன் நியமனத்திற்குச் சம்மதித்து சாட்சிய மளித்தது குறிப்பிடத் தக்கது.

6-10-49 சென்னை கார்ப்பொரேஷன் விசேஷக் கூட்டத்தில் சென்னை நகரை கமிஷனர் மாகாணமாக்குவதோ, ஆந்திரருக்குத் தருவதோ கூடாதென்று தீர்மானிக்கப் பட்டது. இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வரவும் நிறைவேற்றவும் ஆல்டர்மென் திரு. ம. பொ. சி. பெருமுயற்சி எடுத்துக் கொண்டார்.

29-10-49-ல் திரு. ம. பொ. சி. தலைமையில் தமிழரசுக் கழகத்தின் ஆதரவில் கோகலே மன்றத்தில் சர்வ கட்சித் தலைவர்களின் கூட்டம் நடைபெற்றது. அன்று சென்னையைப் பாதுகாக்க பாடுபடுவதற்காக 'சென்னை பாதுகாப்புக் கமிட்டி' ஒன்றும் அமைக்கப்பட்டது.

4-11-49-ல் தமிழரசுக் கழகத்தாரின் பெருமுயற்சியால் பிற தமிழ்ப்பிரமுகர்களின் ஒத்துழைப்போடு டாக்டர் ஆர். கே. ஷண்முகம் தலைமையில் சென்னை ஸ்டேடியத்தில் தமிழக எல்லை மாநாடு நடத்தப்பட்டது. இந்த மாநாட்டில் சென்னையை கமிஷனர் மாகாணமாக்குவதோ ஆந்திருக்கும் உரியபொது நகராக்குவதோ கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது. சென்னை நகரைத் தற்காலிகமாக மத்திய அரசாங்கமே எடுத்து நிர்வகிப்பதென்று (தமிழ் நாட்டுத் தேசியத் தலைவர்கள் சிலருடைய ஆதரவுடன்) நேரு அரசாங்

கம் நிச்சயித்திருந்ததை எதிர்த்துத்தான் இந்த மாநாடு நடைபெற்றது. இந்த மாநாட்டின் காரணமாகவும், கார்ப்பொரேஷன் தீர்மானத்தின் விளைவாகவும் நேரு அரசாங்கம் தனது முடிவைக் கைவிட்டு ஆந்திரப் பிரிவினையையே தள்ளிப்போட நேர்ந்தது.

3-1-53-ல் சென்னை நகரம் பற்றிய தமிழரின் கோரிக்கையை ஆதரித்தும், சென்னையில் ஆந்திர அரசுக்கு தற்காலிகமாகவும் இடந்தரக் கூடாதென்று மேலிடத்து அரசினரை வற்புறுத்தியும் திரு. ம. பொ. சி. பிரரேபித்த தீர்மானம் சென்னை கார்ப்பொரேஷனில் இரண்டாம் முறையாக நிறைவேற்றப்பட்டது.

10-1-53-ல் தமிழ் நாடு காங்கிரஸ் உப கமிட்டியார் நீதிபதி வாஞ்சுவைப் பேட்டி கண்டு சென்னை நகரில் ஆந்திர அரசுக்கோ, நீதி மன்றத்துக்கோ இடந்தர முடியாதென்று திட்டவட்டமாகத் தெரிவித்தனர்.

3-2-53-ல் சென்னை மேயர் திரு. த. செங்கல்வராயன் முயற்சியால் சென்னை நகர்மீது ஆந்திரர்கள் உரிமை கொண்டாடுவதை ஆட்சேபித்து சர்வ கட்சித் தலைவர்கள் பத்திரிகைகளுக்கு அறிக்கை விடுத்தனர்.

13-2-53-ல் சென்னை ரிப்பன் கட்டிடத்தில் மேயர் அறையில் கூடிய சர்வ கட்சித் தலைவர்கள், வாஞ்சுவின் சிபார்சை பலமாகக் கண்டித்து, அதை அமுல் நடத்த வேண்டாமென்று மேலிடத்து அரசினரை வற்புறுத்தி அறிக்கை வெளியிட்டனர்.

16-2-53-ல் சென்னை மேயர் தலைமையில் திருவல்லிக்கேணி கடற்கரையில் சர்வ கட்சிப் பொதுக்கூட்டமொன்று

நடைபெற்றது. வாஞ்சுவின் சிபார்சைக் கண்டித்து திரு வாளர்கள்: ம. பக்தவத்சலம், ம. பொ. சி. முதலியோர் பேசினர்.

4-3-53-ல் பாராளு மன்றத்தில் ஆந்திரால்லாத சென்னை மாகாண அங்கத்தினர்கள் 32 பேர் கையெழுத்திட்டு ஆந்திர அரசுக்கு இடைக்காலமாகவும், சென்னையில் இடந்தரக் கூடாதென்று பிரதமர் நேருவுக்கு விண்ணப்பித்துக் கொண்டார்.

6-3-53-ல் சென்னை மாநில அசெம்பிளி உறுப்பினர்களில் ஆந்திரர் அல்லாத 200 பேர் வாஞ்சுவின் சிபார்சைக் கண்டித்தும், அதை அங்கீகரிக்கக் கூடாதென்று மேலிடத்தாரை எச்சரித்தும் அறிக்கை விடுத்தனர்.

8-3-53-ல் சென்னை நகரில் ஆந்திர அரசுக்கு இடந்தருவதென்று மேலிடத்தார் முடிவு செய்தால், ஆந்திரப் பிரிவினைக் கோரிக்கைத் தீர்மானத்தை சென்னை அசெம்பிளியில் நிறைவேற்ற முடியாதென்றும், தாமும் முதலமைச்சர் பதவியிலிருந்து விலக நேருமென்றும் காங்கிரஸ் காரிய கமிட்டியில் ராஜாஜி கண்டிப்பாகக் கூறினார் விசேஷ அழைப்பின்மீது காரியக் கமிட்டியில் கலந்துகொண்ட திரு. காமராஜரும் அதை ஆதரித்தார்.

மற்றும் திரு. ம. பொ. சி, கடந்த ஏழு ஆண்டுகளுக்கு மேலாக தாம் பேசிய ஒவ்வொரு கூட்டங்களிலும் மாநாடுகளிலும் சென்னை நகர் மீது ஆந்திரர் உரிமை கொண்டாடுவதை எதிர்த்துப்பேசி வந்திருப்பதோடு தீர்மானங்களும் நிறைவேற்றும்படி செய்திருக்கிறார். அவரோடு கழகப் பேச்சாளர்கள் ஒவ்வொருவரும் இந்தத் தொண்டில் பூரணமாக பங்கு கொண்டிருக்கின்றனர்.

சென்னைப் பிரச்னையில் தமிழருடைய கட்சியை வலி யுறுத்தி சென்னை நகரில் மட்டுமென்றி தமிழ் நாடு முழுவ துமே இடைவிடாது பிரசாரம் செய்துவந்த அமைப்பு தமிழரசுக் கழகம் ஒன்றேயாகும்.

ஆம்; சென்னை நகரை ஆந்திருக்குக் கொடுத்தாலும் தமக்கு ஆட்சேபமில்லை யென்று தார் கமிஷன் முன்பு சொன்ன ஈ. வெ. ரா.வும் ஆந்திரர் விரும்பும் காலம்வரை ஆந்திர அரசுக்கு சென்னையில் இடந்தர வேண்டுமென்று முன்னர் கூறிய கம்யூனிஸ்டுகளும் தங்கள் கருத்தை மாற்றிக்கொண்டு தமிழரசுக் கழகப் பாதைக்கு வந்து தீர வேண்டிய கட்டாய சூழ்நிலையை கழகம் உருவாக்கியது.

## வடக்கெல்லைப் போர் வரலாறு

16-8-47-ல்—இந்தியா விடுதலை பெற்ற மறுநாளே—இருபது தமிழ் வீரர்களுடன் வடக்கெல்லை மீட்சிப் பிரச் சாரத்திற்காக சென்னையிலிருந்து வேங்கடத்தை நோக்கிப் புறப்பட்டார் திரு. ம. பொ. சி. ஆகஸ்ட் 16-ந் தேதி கனகம்மசத்திரம்—திருவாலங்காட்டிலும், 17-ந் தேதி திருத்தணியிலும், 18-ந் தேதி நகரிபுத்தூரிலும், 19-ந் தேதி திருப்பதியிலும் பொதுக்கூட்டங்களும், ஊர்வலங் களும் நடத்தி வடக்கெல்லை மீட்சிப்போருக்குக் கால்கோள் விழா நடத்தினார் ம. பொ. சி.

4-11-49-ல் சென்னை ஸ்டேடியத்தில் டாக்டர் ஆர். கே. ஷண்முகம் தலைமையில் நடைபெற்ற தமிழக எல்லை மாநாட்டில் வடவேங்கடம் தான் தமிழகத்தின் வடக் கெல்லை என்று வற்புறுத்தும் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

11-11-49-ல் திருத்தணியில் வடக்கெல்லைப் பாது காப்பு மாநாடு அவ்வாண்டில் மேயராக இருந்த திரு. ராமசாமி நாயுடு தலைமையில் நடைபெற்றது.

5-1-53-ல் சென்னை மேயர் திரு. த. செங்கல்வராயன் தலைமையில் வடக்கெல்லைப் பாதுகாப்பு மாநாடு திருத்தணி யில் நடைபெற்றது. தமிழரசுக் கழக சார்பில் திரு. ம. பொ. சி, தமிழ் நாடு காங்கிரஸ் சார்பில் திரு. எம். பக்த வத்சலம், கம்யூனிஸ்ட்டு கட்சிச் சார்பில் திரு. .ப ஜீவா னந்தம் ஆகியோரும் மற்றும் பலரும் மாநாட்டில் சொற் பொழிவாற்றினர்.

1-1-53-ல் சென்னை மேயர் இல்லத்தில் கூடிய சர்வ கட்சித் தலைவர்கள் கூட்டத்தின் சார்பில் வெளியிடப்பட்ட அறிக்கையில், சித்தூர் தமிழ்ப் பகுதிகளைத் தமிழ் நாட் டோடு சேர்க்க வேண்டுமென்ற கோரிக்கை வற்புறுத்தப் பட்டது. இதில் தமிழரசுக் கழகத்தின் சார்பில் ம.பொ.சி., கவி. கா. மு. ஷெரீப் கலந்து கொண்டனர்.

26-1-53-ல் மாநில தமிழரசுக் கழக இரண்டாவது (சென்னை) மாநாட்டில் "திருப்பதியே தமிழகத்தின் தெய் வீக எல்லை; அதைத் தமிழர் இழக்கக்கூடாது. இழப்பது அவமானம்" என்று தமிழ்ப் பெரியார் திரு. வி. க. முழக் கம் செய்தார்.

30-1-53-ல் வடக்கெல்லைப் பாதுகாப்புக் கமிட்டி தூதுக் குழுவினர், நீதிபதி வாஞ்சுவைப் பேட்டி கண்ட போது, சித்தூர் தமிழர் பிரச்சினையைத் தீர்க்க எல்லைக் கமிஷன் நியமிக்கும்படி மத்திய அரசினருக்குத் தாம் சிபார்சு செய்யப்போவதாக வாஞ்சு அறிவித்தார்.

5

1953 பிப்ரவரியில் ஸ்ரீரங்கம், திருச்சி, சேலம், தாராபுரம் ஆகிய பல்வேறு நகரங்களின் முனிசிபாலிட்டிகளிலெல்லாம் வேங்கடமே தமிழகத்தின் வடக்கெல்லை என்றும் அதற்குத் தெற்கேயுள்ள சித்தூர் தமிழ் தாலுக்காக்களை தாய்த் தமிழகத்தோடு சேர்க்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றின.

7-2-53-ல் சித்தூர் ஜில்லாவில் ஆந்திரருக்கும், தமிழருக்கும் தகராறு இருக்கிறதென்றும், அந்த ஜில்லாவின் ஆறு தாலுக்காக்களில் தமிழ் பேசுவோரே அதிகமென்று வற்புறுத்தப்படுவதால், அது விஷயத்தில் எல்லைக் கமிஷன் அமைக்க வேண்டியது அவசியமெனறும் ஜனக் கணித விபரங்களை இருதரப்பாரும் ஆட்சேபிப்பதால் வாக்கெடுத்து முடிவு செய்வதே சரி என்றும் நீதிபதி வாஞ்சு மத்திய அரசினரிடம் சிபார்சு செய்தனர்.

9-2-53-ல் நகரியில் வடக்கெல்லைப்பாதுகாப்பு மாநாடு நடைபெற்றது. எல்லைப் பிரச்னையில் சென்சஸ் கணக்கை ஆதாரமாகக் கொள்ளாமல் மக்களிடையே வாக்கெடுத்து முடிவு செய்யவேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

22-2-53-ல் சித்தூர் வட்டத் தமிழர் மாநாடு சித்தூரில் ம. பொ. சி. தலைமையில் நடைபெற்றது. முன்னாள் அமைச்சர் டாக்டர் குருபாதம், கவி. கா. மு. ஷெரீப், கே. விநயகம், வாணம்பாடி, வி. கே. குப்புசாமி, புருஷோத்தம முதலியார் எம். எல். ஸி. முதலிய பலர் சித்தூர்த் தமிழ்ப் பகுதிகளை ஆந்திர நாட்டோடு சேர்ப்பதை ஆட்சேபித்து பேசினர். வேங்கடமே தமிழகத்தின் வடக்கெல்லை என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

9-4-53-ல் மத்திய அரசினரின் அறிக்கையை ஆட்சேபித்து திருத்தணி உள்பட சித்தூர் ஜில்லா தமிழ்ப் பகுதிகளில் கடையடைப்பும், கருப்புக் கொடி ஊர்வலங்களும், கண்டனக் கூட்டங்களும் நடைபெற்றன. வடக்கெல்லைப் பாதுகாப்புக் கமிட்டிக்கு திரு. ம. பொ. சி. தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

10-4-53 திருத்தணியில் தாலூகா ஆபிஸ் முன்பு சித்தூர் தமிழ்ப் பகுதிகளை ஆந்திர நாட்டில் சேர்ப்பதை ஆட்சேபித்து மறியல் போர் ஆரம்பிக்கப்பட்டது. தொண்டர்கள் தாலூகா ஆபிசுக்குள் செல்பவர்களைத் தடுத்து மறியல் செய்தனர். திரு. கே. விநாயகம் மறியல் போரின் தளபதியானார்.

3-5-53-ல் மாநில தமிழரசுக் கழகத் தலைவர் திரு. ம. பொ. சி. யின் வேண்டுகோளுக்கிணங்க தமிழகம் முழுவதும் சித்தூர் தினம் கொண்டாடப்பட்டது.

12-5-53-ல் புத்தூர், சித்தூர், ஆகிய பகுதிகளிலும் அரசாங்க அலுவலங்களின் முன்பு மறியல் ஆரம்பிக்கப்பட்டது. புத்தூருக்கு மங்கலங்கிழாரும், சித்தூருக்கு சி. வி. சீனிவாசனும் தளபதிகளாக நியமிக்கப்பட்டனர்.

14-5-53-ல் திருத்தணியில் மறியல் தொண்டர்களை போலீஸார் தடிகளால் அடித்து காயப்படுத்தினர்.

18-5-53-ல் புத்தூரில் நடைபெறவிருந்த வடக்கெல்லைப் பாதுகாப்புக் கமிட்டிக் கூட்டத்தைக் கலைக்க ஆந்திர அதிகாரிகள் 144 தடையுத்தரவை பிறப்பித்தனர்.

21-5-53-ல் சித்தூர் தமிழ்ப் பகுதிகள் பற்றிய பிரச்னையை வரவிருக்கும் எல்லைக் கமிஷன் விசாரித்து முடிவு

செய்யுமென்றும், சித்தூர் தமிழர்கள் மறியல் செய்வதை நிறுத்திவிட வேண்டுமென்றும் வற்புறுத்தி முதலமைச்சர் ராஜாஜி அறிக்கை விடுத்தார்.

22-5-53-ல் கூடிய வடக்கெல்லைப் பாதுகாப்புக் கமிட்டிக் கூட்டத்தில் முதலமைச்சர் ராஜாஜியின் அறிக்கையை வரவேற்பதாகவும், ஆனால், அவருடைய கருத்தை மத்திய அரசாங்கம் ஊர்ஜிதம் செய்யும்வரை கிளர்ச்சியைத் தொடர்ந்து நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

23-5-53-ல் சித்தூர் தமிழர் கோரிக்கை விஷயத்தில் எல்லைக் கமிஷன் விசாரணை நடத்துவதை ஆதரிப்பதாக ஆந்திர மாகாண காங்கிரஸ் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி கூறினார்.

30-5-53-ல் சித்தூர் மறியலில் 65 பெண் தொண்டர்களும் (கிறிஸ்தவ அமெரிக்க மிஷன் பள்ளி மாணவிகள்) பங்கு கொண்டனர்.

1-6-53-ல் வடக்கெல்லைப் பாதுகாப்புக் கமிட்டி திருத்தணியில்கூடி சித்தூருக்காக சென்னையில் கிளர்ச்சியைத் துவக்குவதென்றும், புத்தூர், சித்தூர், திருத்தணி பிரதேசங்களில் மறியலை தற்காலிகமாக நிறுத்தி வைப்பதென்றும் தீர்மானித்தது.

20-6-54-ம் தேதி திருத்தணியில் நூறு பேர் கொண்ட கூட்டம் தண்டவாளத்தின்மீது உக்கார்ந்து கொண்டு சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் எக்ஸ்பிரஸை மேலே செல்ல விடாது இரண்டு மணி நேரம் வரை தடுத்து நிறுத்தினர். தந்திக் கம்பிகளும், டெலிபோன் கம்பிகளும் துண்டிக்கப் பட்டிருந்ததால் குறிப்

பிட்ட நேரத்தில் செய்தி வெளியிடங்கட்குச் சென்று அதன் மூலம் கிடைக்கும் உதவி, ரயில் நிலையத்தாருக்கு விரைவில் கிட்டவில்லை. மாலையில் திருத்தணி பஞ்சாயத்து பொது பார்க்கில் உள்ள ரேடியோ-எப்பொழுதும் தெலுங்கிசையே பாடுகிறதென்று காரணத்தால்—உடைத்தெறியப் பட்டது. மேலேகண்ட சம்பவம் காரணமாக அன்று இரவு போலீஸ் அதிகாரிகள் திருத்தணி தமிழர்களை வீடுபுகுந்து தாக்கினர். பதினைந்து தினங்கட்கு திருத்தணி தாலூகாவில் ஊர்வலமோ பொதுக்கூட்டமோ போடக்கூடாதென்றும் திருத்தணி எல்லைக்குள் ஐந்து நபருக்குமேல் கூடக்கூடாதென்றும் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. கூட்டங்களில் பேசக்கூடாதென்று மங்கலங்கிழார், விநாயகம், தியாகராஜன், ஊராட்சித் தலைவர் சரவணையா, என். சுப்பிரமணியம் ஆகியோருக்கு திருத்தணி சப் மாஜிஸ்ட்ரேட் தடை உத்தரவு பிறப்பித்தார். இந்தத் தடை உத்தரவை மீறி 22-ம் தேதி திருத்தணி தாலுக்கா முழுவதிலும் ஊர்வலங்கள் பொதுக்கூட்டங்கள் நடத்தப்பட்டன. அன்று மாலை திருத்தணி கடைத் தெருவிலுள்ள காந்தி சிலைக்கு முன்பாக திரு. ஈ. எஸ். தியாகராஜன், திரு. இராசு பிள்ளை ஆகியோர் தடை உத்தரவைமீறி சொற்பொழிவாற்றினர் ஆனல், போலீஸார் அவர்களைக் கைது செய்யவில்லை.

23-ம் தேதி திருத்தணி காந்தி சிலைக்கு முன்பு மீண்டும் மறியல் செய்து திரு. ஈ. எஸ். தியாகராஜன் கைதாகினர். என். சுப்பிரமணியமும் கைதானர். திருவாலங்காடு ஊராட்சி மன்றத் தலைவர் திருமலைப் பிள்ளை அதே இடத்தில் தடை உத்தரவை மீறிப் பேசியதற்காக கைது செய்யப்பட்டார்.

24-6-53ல் அதே காந்தி சிலை முன்பாக 144 தடை உத்தரவைமீறி மங்கலம்கிழார், கவிஞர்வானம்பாடி, வி.கே. குப்புசாமி, சென்னை சி. சிவஞானம் ஆகிய நால்வரும் ஒருவர் பின் ஒருவராக கைது செய்யப்பட்டனர். இச்செய்தி பரவியதும் தமிழகமெங்கும் பரபரப்பு ஏற்பட்டது. அதன் விளைவாக 27-ம் தேதி திருச்சிராப்பள்ளி கோட்டை ஸ்டேஷனுக்கும் பாலக்கரை ஸ்டேஷனுக்குமிடையிலே ரயில் நிறுத்தப்பட்டது. வடசென்னை தமிழரசுக் கழகக் தலைவர் உள்ளிட்ட ஐவர் கைதாகி அபராதம் விதிக்கப்பட்டனர்.

வடவெல்லை போர் சுலோகங்களை தெருவில் எழுதியதாக பெரியமெட்டு தமிழரசுக் கழகத்தினர் இருவர் கைது செய்யப்பட்டு அபராதம் வசூலிக்கப்பட்டனர்.

அதே குற்றத்திற்காக தியாகராயநகரில் அன்றிரவு தமிழரசுக் கழகத்தைச் சேர்ந்த ஒருவர் கைதானர்.

சைதாப்பேட்டை தமிழரசுக் கழகத்தினர் மூவர் கைதாகினர்.

## துரோகிகள்

27-ம் தேதி இரவு திருவல்லிக்கேணி பைகிராப்ட்ஸ் ரோடில் வடவெல்லைக் கிளர்ச்சிப் பற்றிய சுலோகங்களை ரோட்டில் எழுதிக்கொண்டிருந்த வ. உ. சி. மன்ற இளைஞர்களை தி. மு. க.வினர் தாக்கி, வடவெல்லைப் போருக்கு எதிரான கோஷத்தை முழக்கமிட்டுச் சென்றனர். இது பற்றி நமது தொண்டர்கள் உடனே போலீஸில் ரிப்போர்ட் செய்தனர்.

## திருவள்ளூர்

28-ம் தேதி பம்பாய் செல்லும் எக்ஸ்பிரஸை திருவள்ளூரில் உள்ளூர் தமிழரசுக் கழகத்தினர் நிறுத்தினர். மூவர் கைது செய்யப்பட்டனர். அன்று மாலை திருவள்ளூர் சிவன் கோயில் அருகில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. திருவள்ளூர் தமிழரசுக் கழகத்தினர் வடவெல்லை போர் பற்றி விளக்கிப் பேசினர். இதே போன்று தமிழகமெங்கும் நடைபெற்றன. வடஆற்காடு திருப்பத்தூரில்மட்டும் அறுபதுக்கு மேற்பட்டோர் ரயில் நிறுத்தியதாகக் கைது செய்யப்பட்டனர். திருவண்ணாமலை, சேலம் போன்ற ஊர்களிலும் வடவெல்லை போருக்கு ஆதரவு காட்டி ரயில் நிறுத்தங்கள் நடந்தன. கோவை, உதகமண்டலம், கடலூர் மாயவரம், திருச்செங்கோடு, மதுரை, மல்லசமுத்திரம், வீரபாண்டி, செஞ்சி, ஆற்காடு இன்றும் தமிழரசுக் கழகம் உள்ள எல்லா ஊர்களிலும் கண்டன ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள் ரயில் நிறுத்தங்கள் நடைபெற்றவண்ணமிருந்தன. சீர்காழி, ஆம்பூர், சேலம், வாணியம்பாடி போன்ற வெளியூர் தோழர்கள் பலர் திருத்தணிப் பாசறைக்கு வந்து குவிந்துக் கொண்டேயிருந்தனர். ரயில் நிறுத்தங்களும், கைதாகின்றவர்களும் நூற்றுக்கணக்கில் பெருகிக்கொண்டே போயின!

## ம. பொ. சி. கைது!

முன்கூட்டியே அரசாங்கத்தினருக்கு அறிவித்துவிட்டு, 3-7-54-ல் தலைவர் ம. பொ. சி. திருத்தணியில் தடை உத்தரவை மீறினர். அவர்கூட திருத்தணி பஞ்சாயத்து [illegible] உபதலைவர் வேங்கடேசனும் புறப்பட்டார். இருவரையும் போலீஸ்

கைது செய்தது. அவ்வளவுதான், புற்றீசல்போல் படை வீரர்கள் புறப்பட்டனர். கோஷங்கள் விண்ணைப்பிளந்தன. புறப்பட்ட ரயில் வண்டிகளெல்லாம் இடையிடையே நிறுத்தப்பட்டன. வேங்கடம் முதல் குமரிமுனைவரையில் கொந்தளிப்பு ஏற்பட்டது. அதிகாரிகள் அஞ்சினர். அரசாங்கம் நடுங்கிற்று. 4-7-53 காலை 10-30 மணிக்கு டில்லி ரேடியோ நிலையத்தில் வந்து நின்று இந்தியப் பிரதமர் நேரு அறிக்கை படித்தார். "சித்தூர் தமிழ் பகுதிகட்கு சீக்கிரமே கமிஷன் அனுப்புகிறேன், கிளர்ச்சியை விட்டுவிடவும்" என அவசர அவசியமாக அதில் அவர் குறிப்பிட்டார்.

இந்தச் செய்தியை சென்னைப் பிரதமர் ராஜாஜி உடனே ஒயர்லெஸ் மூலம் திருத்தணிக்கு அனுப்பினார். சிறையிலிருந்த தலைவர் ம. பொ. சி.க்கு அதிகாரிகள் இச் செய்தியை விளக்கினர். தளபதி விநாயகத்தை ஒயர்லெஸ் நிலையத்திற்கு அழைத்து ராஜாஜியே இதுபற்றி நேரில் பேசினார். போர்முனைத் தளபதியும் தலைவரும் கலந்து பேசினார்கள். சித்தூர் கோடி நடவடிக்கை போர், எல்லைக் கமிஷன் வேண்டும் என்பதற்காகவே துவக்கப்பட்டது.

"எல்லைக் கமிஷனை அனுப்பு" என்பதே போராட்ட வீரர்களின் களமொழி. அதை நேரு ஒப்புக்கொண்டு விட்டதால் அவர் வார்த்தைக்கு மதிப்பு வைத்து தற்காலிகமாகப் போர் நிறுத்தச் செய்தியை ஏற்றுக் கொண்டது வடவெல்லை பாதுகாப்புக் கமிட்டி. உடனே ம. பொ. சிக்கு விடுதலை உத்தரவு வந்தது. ஆனால், அவர் சித்தூர் போராட்டம் சம்பந்தமாக கைது செய்யப்பட்டுள்ள எல்லாத் தொண்டர்களையும் எவ்வித நிபந்தனையுமின்றி அரசாங்கம் விடுதலை செய்வதுடன் வசூலிக்கப்பட்ட

அபராதத் தொகை திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும். அவர்கள் மீது தொடரப்பட்டுள்ள கேஸ்கள் வாபஸாக வேண்டும். அப்பொழுதுதான் போர் நிறுத்தப் பிரகடனம் வெளியிடுவோம், நானும் விடுதலை பெற்றதாக சிறைவிட்டு வெளியேறுவேன் இல்லை எனில் இல்லை'' என்று ஆணித்தரமாகக் கூறி வெளியேற மறுத்துவிட்டார். உடனே இது செய்தி சென்னை பிரதமர் ராஜாஜிக்கு அறிவிக்கப்பட்டது. அவர் இதை ஒப்புக்கொண்டு அறிக்கை வெளியிட்டார். சிறைப்பட்டிருந்த 627 தொண்டர்களும் விடுதலையானார்கள். அதன்பிறகே, போர் நிறுத்தப்பட்டிருப்பதாக தலைவர் ம. பொ. சி. தொண்டர்களுக்கு அறிவித்தார். எல்லா இடங்களிலும் தொண்டர்கள் விடுவிக்கப்பட்டனர். ம. பொ. சி.யும் சிறையைவிட்டு வெளியே வந்தார். எதுவேண்டும் என்று கேட்டோமோ அதைப் பெறுமல் வடவெல்லைப் போரை நாம் நிறுத்தவில்லை.

## தெற்கெல்லைப் போர்

வடவெல்லை போரில் தமிழரசுக் கழகம் நேரடியாக எப்படிக் கலந்துக்கொள்ளவில்லையோ, அதேபோல தெற்கெல்லைப் போரிலும் கலந்துக் கொள்ளவில்லை. வடவெல்லை போரை வடவெல்லைக் கமிட்டி நடத்திற்று. தெற்கெல்லைப் போரை திருவிதாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸ் நடத்திற்று! இந்த இருபோராட்டங்களிலும் தமிழரசுக் கழகத் தலைவர் ம. பொ. சி. உடனிருந்து, உதவிபுரிந்து போராட்டத்தை உருவாக்கினர். செல்லையா-தேவசகாயம் என்ற இரு இளைஞர்கள் மலையாளப் போலீஸின் துப்பாக்கிக் குண்டுக்கு பலியானது தெற்கெல்லை போரின் தியாக வரலாறுக்கு ஒரு எடுத்துக்காட்டு. மூன்று முறையும் பொதுத்

தேர்தலிலே திருவிதாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸ் வெற்றி பெற்றதானது அதன் கொள்கையை அப்பிரதேச மக்கள் முழுமனதுடன் ஒப்புக்கொள்கிறார்கள் என்பதை சட்டப் படி நிரூபித்துக் காட்டுகிறது! பாளையங்கோட்டைக்கு காமராஜரை அனுப்பி கொள்கையை ஒப்புக்கொண்டு போராட்டத்தை நிறுத்தும்படி கேட்டுக்கொள்ள உள்நாட்டு மந்திரி பட்டேல் செய்தது நேரடி நடவடிக்கையில் திரு-தமிழக மக்கள் அடைந்த வெற்றி. ஆனால், இத்தனை நட வடிக்கைகளுக்கும் பிறகு மத்திய—மலையாள—ஆந்திர ஆட் சிகள் மௌனம் பூண்டிருப்பது தமிழர்கள் மீண்டும் சரி யான போராட்டத்திற்கு தயாராக வேண்டும் என்பதையே விளக்கிக் காட்டுகிறது.

## முடிவாக

தமிழரசுக் கழகமும், அதன் தலைவர் ம. பொ. சி.யும், தொண்டர்களும் ஈடுபட்ட இந்தி எதிர்ப்புப் போரால் இந்தி இஷ்டப் பாடமானது. துவக்கிய சென்னை நகர உரிமைப் போரால் சென்னை தமிழருக்கானது. வடவேங்கடம் வரைப் போராட்டம், ஆந்திரர்களுக்கே சொந்தம் என்றான சித்தூர் தமிழ்ப் பகுதிகளில், தமிழர்களுக்கும் உரிமை இருக்கிறதென்பதை ஒப்புக்கொண்டு கமிஷன் வைத்து முடிவு செய்வோம் என மத்திய ஆட்சியை அறிக்கை வெளி யிடச் செய்தது. திரு-தமிழகம் தாய்த் தமிழகத்துடன் இணைவது தவிர்க்க முடியாத ஒன்று என்பதை மத்திய ஆட்சியாளர் முதல் மலையாள ஆட்சியாளர் மனதுவரை பதிய வைத்திருக்கிறது. இந்தச் சேவைகளுக்காக தமிழர சுக் கழகமும், அதன் தலைவர் ம. பொ. சி.யும், தொண் டர்களும் ஏற்றுக்கொண்டுள்ள சிரமங்கள், வாங்கிக்

கொண்டுள்ள வசவுகள் கொஞ்சமல்ல. ஆனால், வெற்றி கிட்டி வருகிறதென்பது தெரிந்தவுடன், எட்டநின்றவர்களெல்லாம் ஓட்டி வந்து தங்களாலேயே சகலமும் நடந்ததாக 'பாவலா'ப் பண்ணவும் தயங்கியதில்லை. இத்தனையும் பொறுத்துக்கொண்டு தமிழரசு கழகம் எல்லைகளில் நல்லதொரு சூழ்நிலையை உண்டாக்கி வைத்திருக்கிறது. பிரஞ்சுத் தமிழகத்திலே உரிமை முழக்கம். கோலார் தங்க வயல் ஜனத்தொகைக் கணக்குப்படி நம்மைச் சேரும். இவை அனைத்தையும் ஒன்று சேர்த்து மேற்குத் தொடர்ச்சி மலைக்கு கீழ்பால், வங்காளக்குடாக்கடலுக்கு மேற்பால், வடக்கில் வேங்கடம், தெற்கில் குமரிமுனை. இந்த நிலப்பரப்பை உள்ளடங்கிய ஐக்கிய தமிழகம் அமைத்து இந்திய ஆட்சியுடன் இணைந்து வாழவேண்டும் என்பதே ஆதிமுதல் தமிழரசுக் கழகம் கூறிவருவது. இன்று அந்தப் பிரச்னை கிட்டி வந்துவிட்டது. தமிழரசுக் கழகம் சொல்லிய புதிய தமிழகம் உருவாகவேண்டும் என்பதை சகல கட்சிகளும் இன்று ஒப்புக்கொள்கின்றன. என்றாலும் அதற்காக தமிழரசுக் கழகம் மட்டுமே செயலில் ஈடுபட்டிருக்கிறது. மற்ற கட்சிகள், கழகங்கள் சந்தர்ப்பக் குரல் எழுப்புவதுடன் சகலமும்தீர்ந்துவிட்டதாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், இனியும் இந்தப் பிரச்னையில் மத்திய ஆட்சி காலம் கடத்திக்கொண்டு போக முடியாது. ஆகவே, விரைவில் புதிய தமிழகம் அமைவதை எவரும் தடுக்க முடியாது. அப்படி அமையும் தமிழகம் எப்படி இயங்க வேண்டும் என்பதையும்—தமிழக — இந்தியா—உலக—நன்மைகளை உத்தேசித்து கட்சி அரசியலற்ற தன்மையில் பொது அரசியலாக—தமிழ்த் தேசிய இன மக்கள் முழுமைக்குமுடைய

கோரிக்கையாக தமிழரசுக் கழகம் இதை வெளியிட்டு வருகிறது.

## ஏன் தமிழரசு கேட்கிறோம்?

1947 ஆகஸ்டு பதினைந்தாம் தேதி நமக்குச் சுதந்திரம் வந்தது. ஆனால், அதற்கு முன்பு இந்திய ஏழை மக்கள் எந்த விதத்திலிருந்தார்களோ அதிலிருந்து இம்மியும் இன்று மாறுதல் இல்லை. வெள்ளையன் வெளியேறினால் நமது கஷ்டங்களெல்லாம் தொலைந்து விடும் என்று சொன்னோம். அவன் வெளியேறி ஏழாண்டுகளாகியும் ஏழை நிலைமை அப்படியேதான் இருக்கக்காண்கிறோம். அதிகாரங்கள் நம்மவர்கள் கைக்கு மாறியிருக்கிறது. இதனால் ஏழை மக்கள் அடைந்துள்ள நன்மைகள் எதுவுமில்லை! தனிப்பட்ட முதலாளிகளும் நிலச்சுவான்தார்களும் பிரபுக்களும் செய்யும் கொடுமைகள் ஒரு புறமிருக்கட்டும், அரசாங்கத்தின் நேர் நிர்வாகத்தின் கீழ் இருக்கும் அதிகாரிகளாவது ஏழைகளிடத்தில் அன்பாய் நடக்கிறார்களா? லஞ்சம் வாங்காமல் காரியம் செய்து கொடுக்கிறார்களா? இல்லையே! கிராமத்திலிருந்து வயதால் தங்களைவிட எவ்வளவு பெரிய மனிதன் வந்தாலும், வருபவர் ஆங்கிலநாகரீகத்திற்கு அடிமைப் படாதவராக இருந்தால் அதிகாரிகள் மதிப்பதேயில்லையே! ஏய், எங்கே வந்தாய்? என்பது போன்ற ஒருமைப் பதமிட்டுத்தானே இன்றும் அழைக்கிறார்கள். பியூன்கள்கூட தங்களினும் தாழ்ந்தவர்களாக கிராம மக்களை—ஏழைகளை—கருதுகிறார்களே! அதே நேரத்தில், ஆங்கிலம் படித்த வெறும் 'சவடால்' பேர்வழி வந்தால்கூட வரவேற்பளித்து ஆசனத்தில் அமர வைத்து, வந்த காரியத்தை விசாரித்து, விவரம் கூறி அனுப்புகிறார்களே! இது என்...? இதுவா

சுதந்திரம்? இதிலிருந்து நிவர்த்தி காண அதிகாரிகளை மரியாதை வாரம் கொண்டாடச் செய்கிறார்கள். மரியாதை, விழாக்கொண்டாடுவதால் வந்துவிடக் கூடியதா? வருபவன் தனக்குச் சரி நிகர் சமானமானவன் என்றோ, அதிகார எல்லையின் தன்மை புரிந்தவனென்றோ நம்பினாலன்றி அதிகாரிகள் மரியாதையுடன் நடந்துகொள்ள மாட்டார்களே. வருபவன் படிப்பற்றவன், மூடன் என்று தெரிந்தால் இவனால் நம்மை என்ன செய்துவிட முடியும் என்ற அகந்தையில் அலட்சியம் காட்டத்தானே நினைப்பார்கள்?

## இதை மாற்றும் மார்க்கம்?

அதிகாரிகளின் மனப்பான்மையை மரியாதை வாரங்களினால் மாற்றமுடியாது. அரசாங்க நடவடிக்கைகள் இயங்கும் விதம், அதிகாரிகள் யார்? எதற்காக அவர்கள் இருக்கிறார்கள்? என்பவைகள் அனைத்தையும் புரிந்துகொள்ளும்படி மக்களை நாம் செய்யவேண்டும். இதற்காக நாட்டு மக்கள் அனைவரையும் ஆங்கிலப் படிப்பிற்கோ ஆங்கில நாகரீகத்திற்கோ மாற்றிவிடலாம் என்பதும் சாத்தியமற்ற விஷயம். ஆகவே, ஆட்சி மொழி மக்கள் மொழி என்று ஆக வேண்டும். அப்படி ஆகிவிட்டால் ஏக காலத்தில மந்திரத்தால் கட்டுண்ட நாகம்போல் அதிகாரிகள் ஆணவம் குறைந்து அடக்கி விடுவார்கள். அன்னிய ஆட்சியில் தேசியக் கொடியை அவமதித்த அதிகாரிகள்தானே இன்று அதை காப்பது தங்கள் கடமையென்று உழைக்கிறார்கள்? அன்னிய ஆட்சி அகன்றதும் சொந்த ஆட்சியிடம் பற்று வைக்கும் அதிகாரிகள், அன்னிய மொழி அகன்று தாய் மொழியில் ஆட்சி துவக்கினால்—மொழியால் உயர்வு தாழ்

யில்லை என்ற நிலை உருவானால்—வெறும் படிப்பைவைத்து மட்டும் உல்லாச வாழ்வு வாழமுடியாது என்பது நிலையானால்—அன்னிய மொழி படித்தவனென்ற அகந்தை அதிகாரிகளிடம் குறையும். தாய் மொழிகூட படித்திராத கிராம மக்கள் வந்தாலும் அவர்களிடமும் அன்பாகப் பழகவேண்டும் என்ற அக்கரை பிறக்கும். லஞ்சமும், பொய்யும் மறையும். அதிகாரிகளுக்கும் பொது மக்களுக்கும் அன்னியோன்யம் வளரும். அதிகாரிகளுடன் ஒத்துழைப்பார்கள் பொதுமக்கள். பொதுமக்களின் தொண்டர்கள் நாம் என்பதை உணர்ந்து அதிகாரிகளும் நடப்பார்கள். ஆட்சியாளர்களிடம் பொதுமக்களுக்குள்ள அவநம்பிக்கை குறைந்து, ஆட்சி நம்முடையதே என்ற எண்ணம் வளரும். தாய் மொழியில் ஆட்சி வாராததினால், அரசாங்கம் சொல்வதை பொதுமக்கள் நேரடியாகத் தெரிந்துக் கொள்ள முடிவதில்லை. பொதுமக்களுக்கும் அரசாங்கத்திற்கும் தொடர்பில்லை என்றவுடன் அரசாங்கத்தைப் பற்றி மக்களிடமும், மக்களைப்பற்றி அரசாங்கத்திலும் தவறான விஷயங்களைச் சொல்லி தப்பெண்ணத்தை வளர்த்து விடுகிறார்கள் சுயநலக்காரர்கள். தாய் மொழியில் ஆட்சியில்லாததினால், அரசாங்க சட்டதிட்டங்கள் எப்படி இயங்குகிறதென்பதை பாமரரும், தாய்மொழி மட்டும் படித்தோர்களும் தெரிந்துக் கொள்ள முடியவில்லை. எனவே, குற்றம் புரிந்தோனும் வக்கீலை நாடுகிறான், குற்றம் புரியாதவனும் வக்கீலை நாடுகிறான். இருவருமே சட்டம் புரியாதவர்களென்று வக்கீல்கள் புரிந்துக் கொண்டிருப்பதால், இரண்டு தரப்பாருக்கும் கேஸ் நடத்த இசைகிறார்கள். தோற்றாலும் வென்றாலும்—நியாய அநியாய அடிப்படையை மறந்து, தங்கள் தங்கள் வக்கீல்களாலேயே

தோல்வி வெற்றி நேர்ந்ததாக பாமரமக்கள் எண்ணிக் கொள்கிறார்கள். அப்படி அவர்கள் எண்ணுவதிலும் ஒருவிதநியாயமிருக்கிறது. ஏனென்றால், கோர்ட்டில் நடக்கும் வாதப் பிரதிவாதம் நீதிபதியின் தீர்ப்பு ஆகிய அனைத்தும் அன்னிய மொழியில் நடப்பதால், என்ன நடந்து இந்தத் தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறதென்பது தாய் மொழி மட்டும் படித்தோருக்குப் புரிவதில்லை. எனவே, நீதியின் பெயரால் வக்கீல் தரகர்கள் வகுத்ததே வழியாக இருக்கிறது. இந்த நிலை தகர்ந்து நீதியை மக்கள் மதிக்க வேண்டுமானால்—நீதிபரிபாலனங்கள் நேர்மையுடன் நடைபெற வேண்டுமானால்—நீதிமன்றங்களும், நீதிக்கு வழக்குரைப்பதும், சட்டக் கல்லூரிகளும் தாய் மொழியில் நடந்தாக வேண்டும். அப்பொழுதுதான் அந்தத் துறையிலே மக்களை ஏமாற்றுவோர் குறைவார்கள். மக்களும் நாம் ஏமாற்றப்பட்டோமா இல்லை என்பதைப்புரிந்துகொள்ள முடியும். "நீதிபதி மோசம் செய்து விட்டான், இது அநீதி நிறைந்த சர்க்கார்" என்றுகூறி, ஆட்சியாளர்மீது பகையை வளர்த்து. படாடோபமாக வாழ்வதிலிருந்து விடுபட்டு, உண்மையின்பால் வக்கீல்களும், நீதிபதிகளும், பொதுமக்களும் நெருங்க முடியும். இன்றைய நமது ஆட்சியில் நீதிபதிகள் போலீஸ் இலாகா சொல்லுவதை நம்புவதில்லை. நீதிபதிகள் உண்மையைத் தெரிந்து கொள்ளும்படி வக்கீல்கள் விடுவதில்லை. வக்கீல் உண்மைக்காக மட்டும் வழக்காடுவதில்லை. எனவே, பொதுமக்கள் குற்றம் புரிந்தால், அதை மறைக்க அவர்கள் வழக்காடாமலும் இருப்பதில்லை! இந்த நிலை ஒருநாட்டில் அன்னிய ஆட்சிநடக்கும் நாட்களில் நடக்கலாம். கொடுமையெல்லாம் அறமென்று அன்னிய ஆட்சியில் சாதிக்கப்படலாம். ஆனால், சுய ஆட்சி நாட்டில்

இருக்கலாமா? உண்மையாக ஒருவனைத் திருடன் என்று தெரிந்தபின்பும், அவனுக்காக வழக்கறிஞர்கள் வக்காலத்து வாங்கலாமா? சமுதாயத் துரோகியை, தனது வாக்குச் சாதுரியத்தினால்—வாதாடும் திறமையினால்—மிக உயர்ந்த நேர்மைவாதி எனச் சாதித்து, போலீஸார் அபிப்ராய வழக்குத்தொடுத்திருக்கிறார்கள் என நிரூபித்து, விடுதலை வாங்கிக் கொடுக்கலாமா? திருடர்களுக்காகவும், கொலைஞர்களுக் காகவும், கொடுமைக்காரர்களுக்காகவும் வழக்காடுபவர் களாக ஒரு நாட்டின் வக்கீல்கள் இருப்பவர்களானால், அந்த நாடு உருப்படுமா? நமது இந்தியாவில் இன்றிருக்கும் வழக்கறிஞர்கள் இந்த நிலையில்தானே இருக்கிறார்கள்? "ஒருவன் சமுதாயத்திற்கு நல்லவனா கெட்டவனா என்பது பற்றி எங்கட்குக் கவலையில்லை. அவன் தரும் (வக்கீல்பீஸ்) பணம்தான் பிரதானம்" எனபதாகக் கூறும் ஒரு வழக்கறி ஞனை மேலே நாடுகளில்காண முடியுமா? சுய நலமே உரு வான—சமுதாய விரோதிகளான—இவர்கட்குப் பெயர் வழக்கறிஞர்களா? அல்லது பணம்தேடும் மார்க்க அறிஞர் களா? அடிமை யொழிந்ததே தவிர இந்த அனாச்சார புத்தி நம்மவர்களை விட்டு ஒழியவில்லையே!

ஆகவே, இதுபோன்ற அனாச்சாரங்கள் ஒழிந்து நமது கலாச்சாரங்கள் பெருக வேண்டும் என்கிறது தமிழரசுக் கழகம்.

## அனாச்சாரத்திலும் அனாச்சாரம்

நம்மிடம் வந்து ஒட்டிக்கொண்டுள்ள அனாச்சாரத் திலும் மிக மட்டமான அனாச்சாரம், தாய் மொழியையும் தாய் மொழியிலுள்ள கற்றோர்களையும் மதிக்கமறந்தது. இது அடிமைப்பட்ட வாழ்வில் நம்மை ஆக்ரமித்துக்கொண்ட

கெட்ட பழக்கம். இதிலிருந்து எவ்வளவு விரைவில் விடுபடுகிறோமோ அவ்வளவு விரைவில் நமது நாடு உயர்வடையும். நாமும் உயர்ந்தவர்களாவோம். உலக மேதை பெர்னாட்ஷா, காவியமன்னன் சேக்ஸ்பியர் ஆகியோர்கள் தனது தாய்மொழி மட்டும் கற்றோர்களே தவிர, அன்னிய மொழியில்—அதுவும் ஆறாயிர மைல்களுக்கு அப்பால் உள்ள மொழியில்—வல்லுனர்களில்லை. அன்னிய நாட்டவர்களை தனது தாய்மொழிமட்டும் படித்தோராக இருந்தாலும்கூட பாராட்ட நாம் தயங்குவதில்லை. ஆனால், நம்மவர்களில் தாய்மொழியை மட்டும் படித்துள்ள மேதைகளைக் கண்டால் நாம் மதிப்பதேயில்லை. அன்னிய மொழியான ஆங்கிலம் பயிலாத நம்து நாட்டு மேதையை நாம் (Semi)—அதாவது பாதி மனிதன்—என்று கூசாது கூறுகிறோம். ஒருவன் அறிஞனாவது அன்னிய மொழி படித்ததால் வருவதல்ல. தனது மூளை பலத்தால் வருவது. உலக விஞ்ஞானிகளில் அனைவருமே அன்னிய மொழிப் புலவர்களல்ல. தாய் மொழியில்கூட அதிகம் படித்திராதவர்களும் மிகப் பெரிய மேதைகளாக விளங்கி இருக்கிறார்கள். ரயில், மோட்டார் ஆகாய விமானம், தந்தி, டெலிபோன், ரேடியோ, எலக்ட்ரி போன்ற விஞ்ஞான சாதனங்களெல்லாம் வெறும் தாய் மொழிப் படிப்பாளர்களால் கண்டு பிடிக் பட்டவையே! நம் நாட்டில்கூட அன்னிய ஆட்சி ஏற்படுவதற்கு முந்தி தாய் மொழி மட்டும் படித்தவர்கள், அறிஞர்களாக, கலைஞர்களாக, சிற்பிகளாக மதிக்கப்பட்டு போற்றப்பட்டு வந்திருக்கிறார்கள். உலகம் போற்றும் அறநூலான திருக்குறளை எழுதியவர் வெறும் தமிழ்ப் படித்த தொழிலாளி தான். தஞ்சை நிழல் சாயாகோபுரமும், இரும்பு மாம் துளியும்மில்லாமல் கட்டப்பட்டுள்ள மதுரை திருமலை நாயக்கன்

மகாலும் தாய் மொழி மட்டும் படித்தோரின் வன்மையால் எழுந்ததே! ஜெர்மன் தேசத்து விஞ்ஞானம் ஜெர்மானிய மொழியில்தான் வளர்ந்திருக்கிறது. பிரஞ்சு விஞ்ஞானம் பிரஞ்சு மொழியிலேயே வளர்க்கப்படுகிறது. வேற்று மொழிகளிலிருந்து விஞ்ஞானக் கலைகளை ஆவல் பெற்ற ஜப்பானியர், அதைத் தங்கள் மொழியின் மூலமேதான் போதித்தனர். நோபல் பரிசு பெற்ற கவிதையை தாகூர் தனது தாய் மொழியில்தான் முதலில் எழுதினர். ஆங்கிலமும் அறிந்த அவர், தான் சென்ற நாடுகளிலெல்லாம் தனது தாய்மொழியான வங்காளியிலேதான் பிரசங்கித்தார். உலகத் தலைவன் மகாத்மா காந்தி, சத்தியசோதனையென்ற தனது வாழ்க்கை வரலாற்று நூலை தனது தாய் மொழியான குஜராத்தியிலேதான் எழுதினர். ஆனல், நமது தமிழ்நாட்டில் தாய் மொழியைப் போற்றுவதில்லை. தாய் மொழிப் புலவர்களை திட்டுவதும் சேக்ஸ்பியரைக் கொண்டாடுவதும் சர்வசாதாரண நிகழ்ச்சியாகி விட்டது!

## இதனல் என்ன நட்டம்?

“இப்படி பிறமொழிப் புலவர்களையும் பிரமொழி இலக்கியங்களையும் போற்றுவதினல் என்ன குறைந்து விடப்போகிறது? ஏன் இந்த குறுகிய புத்தி கொள்ள வேண்டும்?” எனச் சிலர் கேட்கிறார்கள். பிறமொழியைப் போற்றுவது குற்றமல்ல. ஆனல், நமது மொழிக்குரிய மதிப்பையும் மரியாதையையும் தந்துவிட்டு அன்னிய மொழியை நாம் கற்கவேண்டும். தம்மை மறந்து, அல்லது திட்டிக் கொண்டே ஆங்கிலத்தையும் சேக்ஸ்பியரையும் கொண்டாடுவது தவறு. இதனை, தமிழ் மட்டுமல்ல தமிழ்க் கலை, கலாச்சாரம் ஆகிய அனைத்துமே நசித்து நாசமாகிவருகிறது.

உதாரணமாக

ஆங்கிலத்தின் மூலமாகத்தான் தொழிற் கல்வி பெற முடியும் என்ற நிலை வளர்ந்ததினால்தான் நமது நாட்டுத் தொழில்கள் அனைத்தும் நாசமடைந்தன. தமிழ் நாட்டு வைத்தியத் தொழில் உலகிலேயே மிகச் சிறந்ததாகும். அதன் நிலை இன்று எப்படியிருக்கிறது? தமிழ் நாட்டிற்கு—இடைக்காலத்தில் வந்த—ஆயுர்வேத வைத்திய முறையை தவிர தமிழில் வேறு வைத்திய முறையே கிடையாதென்ற தவறான ஆராய்ச்சியை இந்திய அரசாங்கம் ஒப்புக்கொண்டு விட்டது. ஆயுர்வேத வைத்திய முறைகூட தேவையில்லை ஆங்கிலமுறையே போதுமானது என்ற முடிவில் மத்திய ஆட்சி காரியமாற்றி வருவதாகவும் தெரிகிறது. ஆயுர்வேதம் வருவதற்குமுன்பு மிகச் சிறந்த சித்த வைத்தியம் இங்கே இருந்ததென்றோ, அது இன்னும் கிராம வைத்தியமாக மக்களிடம் நிலைத்து நிற்கிறதென்றோ யார் அறிவார்? நம்மிடத்தில் ரண வைத்திய நூல், சத்திர வைத்தியம், கண் வைத்தியம் போன்ற சிறந்த வைத்தியங்களெல்லாம் இருந்தன. இன்றும் இருக்கின்றன என்பதையெல்லாம் எவர் அறிவார்? அறியாதநிலைதான் நமது வைத்தியக் கலை செத்தது. நமது வைத்தியக் கலையைச் சாகடித்துவிட்டு, டாக்டர் படிப்பென்று ஒன்றை ஏற்படுத்தி, பணக்கார வீட்டுப் பிள்ளைகளுக்கு அந்தப் படிப்பை நல்கி, மேனாட்டு மருந்துகளுக்கு இந்தியாவை மார்க்கட்டாக்கி வைத்திடத் தொழில் மூலமும் நம்மைச் சுரண்டி வாழ்ந்தது ஆங்கில ஆட்சி! ஆண்டபோதும் சுரண்டிற்று. அகன்று பின்பும் மருந்துகளனுப்பிச் சுரண்டிக் கொண்டிருக்கிறது. நம் நாட்டுக் காடுகளிலே விளையும் மூலிகைகளை குறைந்த

விலைக்கு வாங்கி, மேலை நாட்டிற்கெடுத்துச் சென்று, அதை மருந்துகளாக்கி அதிகவிலைக்குவிற்று ஆனந்தமாக வாழ்கின்றது பேலைநாடு! உள்நாட்டு வைத்தியத்தை இழந்ததின் பலன், அன்னிய நாட்டு வைத்தியத்திற்கும் மருந்திற்கும் பணத்தைக் கொட்டி அழவேண்டியதாக முடிந்திருக்கிறது!

வைத்தியம் மலிவாக இல்லை. வைத்தியத்தொழில் செய்யும் டாக்டர்களுக்கு கருணையுள்ளமில்லை. ஏழைகளுக்கு நோய் கண்டால் கடவுளை நம்புவதைத்தவிர டாக்டரை நம்ப வழியில்லை. காரணம் டாக்டர்கள் கேட்கும் பணத்தைக் கொடுக்க ஏழைகளுக்குச் சக்தியில்லை. இதை உணர முடியாத சில அரசியல்போலிகள், "நம்மவர்களுக்கு நோய் கண்டால், டாக்டரிடம் போவதைவிட ஆண்டவனிடம் ஓடவே ஆசைப்படுகிறார்கள்" என்று எழுதி, பேசி கிண்டல்செய்து அதுவே நாட்டின் தொண்டு என்று எண்ணி மகிழ்கிறீர்கள். கையைத் தொட்டுப் பார்க்கப் பணம், மருந்திற்குப் பணம், மருந்துண்ணும் நாளிலே பத்திய பதார்த்தங்கள் வாங்கப் பணம். இப்படி, டாக்டரிடம் சென்றால பணப்பெட்டியைத் திறந்துவிட வேண்டியதிருக்கிறது. ஏழைகளால் சாத்தியமா? எனவே மருந்து வாங்க வழியில்லாத நிலையில், மரண வாயிலில் நின்று விதியை நம்புகிறார்கள் ஏழைகள். இதை மூடத்தனம் என்று முடித்துவிடுவது பகுத்தறிவாகாது. வைத்தியத் தொழில் எளிய முறையில் நடைபெற வழிவகுக்க வேண்டும். அப்பொழுதுதான் அது ஏழைகளுக்குப் பயன்படும். ஆங்கிலம் படித்தோர்களால் எளிய முறையை கையாளமுடியாது. காரணம், அன்னிய மொழியில் வைத்தியக் கல்வி பெற அதிகப் பணம் பிடிக்கிறது. பல ஆயிர ரூபாய் செலவில் பல ஆண்டு கஷ்டப்

பட்டு படித்த தொழிலை எளிய வகையில் நடத்தி நஷ்டமடைய எந்த மனிதன் விரும்புவான்? எனவே, தான் செலவழித்த பணத்தை திரும்பிப் பெற அதிகப் பணம் கேட்கிறான் டாக்டர்! இது ஏழைகளால் கொடுக்கச் சாத்தியமில்லை. மேலும், டாக்டர்கள் இனமாக வைத்தியம் செய்வதென்றாலகூட, மருந்தின் கிரயம் தனியாக, அதிகமாகவே இருக்கிறது. மேலை நாட்டு மருந்துகளுக்கு உணவு முறை பார்லி, ஹார்லிக்ஸ், ஓவல், குல்கோஸ், ரொட்டி, பால், ஆரஞ்சுப் பழம் இப்படி பணக்காரர்களால் மட்டும் வாங்கக்கூடிய வகையிலிருப்பதால், வைத்தியம் மருந்து ஆகியவைகளை, தர்ம ஆஸ்பத்திரிகளில் பெற்றுக் கொண்டால்கூட, ஆகார வஸ்துக்கள் வாங்க முடிவதில்லை. எனவே ஏழைகள் நிறைந்த நமது நாட்டிற்கு மேலை நாட்டு வைத்தியமுறை உகந்ததாகத் தெரியவில்லை. சாதாரண காய்ச்சல் ஜுரம் போன்றவைகளுக்கூட டாக்டர்கள் ஆகார முறைகளை இப்படித்தான் சொல்லுகிறார்கள். இப்போது நமது நாட்டில் நடைபெற்று வரும் மேனாட்டு வைத்தியம் அந்த நாட்டு மக்களின் வாழ்க்கை, கலாச்சாரம், உணவு ஆகிய பண்பை ஒட்டி அவர்களுக்காகத் தயாரிக்கப்பட்டதே தவிர நமக்காக நமது வாழ்க்கைத் தரத்துக்கு ஒத்த முறையில் தயாரிக்கப்பட்டதல்ல. எனவே, ஏழைகள் நிறைந்த நமது நாட்டிற்கு அது ஒத்ததல்ல. நமக்கேற்றது நம் நாட்டு முறையே. நம் நாட்டு வைத்திய முறையில், அதுவும் சித்த வைத்திய முறையில், பத்தியம் பூராவும் அரிசிக் கஞ்சியிலேயே முடிந்துவிடும். ஏழைகளுக்கு ஏற்றதாக இருக்கும். நோய்களை அறிந்து மருந்து கொடுக்கும் வைத்திய தன்மையில்கூட சித்த வைத்திய முறைகளைவிட மேனாட்டு வைத்திய முறைகள் சிறந்ததெனச் சொல்லிவிட முடியாது.

ஆங்கில டாக்டரிடம் ஒரு நோயாளி போனால், கண்ணைத் திறந்து பார்த்தல், நாக்கை நீட்டச் சொல்லிப்பார்த்தல்—வயிற்றை அமுக்கிப்பார்த்தல், ரப்பர்குழல் கருவிச் சோதனை ஆகிய அனைத்தையும் முடித்துக்கொண்டு, உங்களுக்கு என்ன செய்கிறதென்று நோயாளியை டாக்டர் கேட்பார். நோயாளி நோயைச் சொல்ல வேண்டும். "அந்த நோய்க்கு என்ன மருந்து?" என்று புத்தகத்தைப் பார்த்தறிந்து மருந்தெழுதிக்கொடுப்பார். அவர் எழுதிக்கொடுத்த மருந்தால் நோய் குணமாகவில்லை என்றால் மருந்தை மாற்றுவார். அதுவும் சரியில்லை என்றால் அப்புறம் வேறு மருந்து. பிறகு இரத்தப் பரிசோதனை. மனித அவயவங்களின் உட்புற (X-Ray) படம்பிடிப்பு, ஆபரேஷன் இப்படியாக சிகிச்சைவளர்வதைத் தவிர நோய் குணமாவது சொற்பமே. சித்த வைத்தியர், ஆயுர்வேதம், யூனானிமுறை ஆகியவைகளில் இப்படியில்லை. நோயாளியைப் பார்த்ததும், அல்லது கைப்பிடித்துப் பார்த்ததும், இன்னநோய் உங்களுக்கென்று வைத்தியரே சொல்லுவார், தானே தயாரித்த மருந்தையும் கொடுப்பார். மருந்து தயாரிப்பவர் வேறு, வைத்தியர் வேறு என்ற இரட்டை முறை நம் நாட்டில் இருந்ததில்லை. மருந்து தயாரிப்பதும் மருத்துவ முறையும் குடிசைத் தொழிலாக-குலத் தொழிலாக-நம்நாட்டிலே வளர்ந்து வந்தது. அது ஏழைகளுக்கு ஏற்றதாக இருந்தது. ஆங்கில வைத்தியம் திறமையுடையதாக இல்லாவிட்டாலும், ஆடம்பரத்தில், விளம்பரத்தில், பண உயர்வில், படாடோபத்தில் நம்மவர்களை மயக்கிவிட்டிருக்கிறது. நாட்டு வைத்தியம் மட்டமானது என்ற மனப்பான்மையை வளர்த்துவிட்டிருக்கிறது. இதனால் ஏழைகள் நோயால் செத்துமடிகிறார்கள். பணக்காரர்கள் பணமிருப்பதால் இதைப்பற்றியெல்லாம் கவலைப்படாமல் வாழ்

கிறார்கள். கண் வைத்தியத்திற்கு தனி டாக்டர்! அமெரிக்கா சென்று படித்து வந்த அந்த டாக்டர் பார்த்து குணமடையாத கண்நோய்களை குணப்படுத்தும் நாட்டு வைத்தியர்கள் நம் நாட்டில் நிறைய உண்டு. அறுப்பு (CperatioN) வைத்தியத்தை ஐரோப்பா சென்று படித்துவந்தோரால் கைவிடப்பட்ட ஒடிந்த கால், ஒடிந்த கைகளை ஊனமின்றிக் குணப்படுத்தும் ஒரு இரண்டு வைத்தியர்கள் தமிழகத்தில் ஆயிரமாயிரம் உண்டு. ஆஸ்த்மாவை, க்ஷயரோகத்தை, குஷ்டரோகத்தை—ஏன் மனிதனுக்கு வரும் சகல ரோகங்களையும்—குணப்படுத்தும் தமிழ் வைத்தியர்கள்—வைத்திய முறைகள் பல உண்டு. இவைகளை ஆராய்ந்து ஆராய்ச்சி செய்து, ஒழுங்குபடுத்தி, நல்லதைக்கொண்டு அல்லதைத் தள்ளி, மேலை நாட்டு வைத்திய முறைகளிலும் நமக்குத் தேவையானதை எடுத்து சேர்த்திணைத்து தாய் பாஷையிலேயே வைத்தியக் கல்வியைப் போதித்தால் நமது பண்பாடு கலாச்சாரத்திற்கேற்ற வைத்தியத் தொழிலை நாம் நிர்மாணித்துக் கொள்ள முடியும். வெளிநாட்டுக்குச் சுரண்டப்பட்டும் போய்ச் சேரும் பணம் மிஞ்சும். உள்நாட்டுத் தொழில் வளரும். ஏழைகளுக்கு குறைந்த செலவில் குக்கிராமத்திலும் வைத்திய வசதிகள் கிடைக்கும். நோயகலும். குறையொழியும். நோயாளிகளுக்காக டாக்டர்களை தவிர, டாக்டர்களுக்காக நோயாளிகள் என்றுள்ள தலைகீழ்ப் பாடம் மறையும். ஆங்கிலக் கல்வியில் வைத்தியத் தொழிற் கல்வி நடைபெறுவதால், பணக்காரர் வீட்டுப் பிள்ளைகளே டாக்டர்களா வருவதும், அவர்களிடம் ஒட்டிக்கொண்டுள்ள ஆங்கில நாகரீகம், ஏழைகளை வெறுக்கச்சொல்லுவதால், ஏழைகள் வைத்திய வசதியற்று அழுவதுமான அவல நிலையில் வைத்தியப் படிப்பு

நடைபெறுகிறது. தமிழிலேயே இந்தக் கல்வி போதிக்கப் பட்டால், ஏழை வீட்டுப் பிள்ளைகளும் டாக்டர்களாகி ஏழைகளுக்கு எளிய கையில் வைத்தியம் செய்ய வசதி ஏற்படும். இதை நாம் எடுத்துச் சொன்னால் வைத்தியப் படிப்பைதமிழில் நடத்தமுடியாதென்கிறார்கள் நமதுநாட்டு ஆங்கில மேதைகள். தமிழறிந்தவர்கள், தமிழ் வைத்திய முறை தெரிந்தவர்கள், அத்துடன் ஆங்கிலவைத்திய முறை யையும் பயின்று இப்படிச் சொன்னால் அதைப்பற்றி நாம் ஆராய நினைக்கலாம். எண்ணுவது ஆங்கிலம், எழுதுவது ஆங்கிலம், பேசுவது ஆங்கிலம் என்று உள்ள ஆங்கில தாசர்கள், உணவால், உடையால், வீட்டில்பேசும் மொழி யாலும்கூட ஆங்கில நாகரிகத்தை வளர்த்துக் கொண்டிருக் கிற மேதாவிகள்—தமிழறியாச் சூனியங்கள்—தமிழிலே வைத்தியத் தொழிலை வளர்க்க முடியாதென்கிறார்கள். வளர்ப்பதல்ல சொல்லவும் முடியாதென்று தமிழைத் தொட்டுப் பார்க்காமலே சொல்லுகிறார்கள். அற்புதமான வைத்தியக்கலை நிறைந்த தமிழ், ஆட்சி பீடம்விட்டு இறங் கியதும் அடைந்துள்ள நிலையை பாருங்கள். தமிழிலே வைத்தியத்தொழிலை பயிற்றுவிக்க முடியாதாம்! ஏன் இப்படிச் சொல்லுகிறார்கள் தெரியுமா? ஏழை வீட்டுப் பிள்ளைகள் வைத்தியத் தொழிலை எட்டிப் பார்க்காதிருக்க! ஆங்கிலத்திலேயே வைத்தியக் கல்வி போதிப்பதாக வைத்து விட்டால், ஏழைமக்களுக்கு ஆங்கிலப் படிப்பிற்குப் பணம் ஏது? ஆகவே உத்தியோகம் பணக்கார வீட்டுப் பிள்ளைகளுக்கே குத்தகைக்கு விட்டு விட்டமாதிரி ஆகி விடுமல்லவா? ஆகவேதான் அப்படிச் சொல்லுகிறார்கள். சொல்லுவதும், சொல்ல வைப்பதும் பணம் படைத்த கூட்டமாக இருப்பதினால் சொல்லுகிறார்கள். பணத்தைப்

போட்டு படிப்பைப் பெற்று, ஏழைகளை, கூலிகளை, தொழிலாளிகளை வாட்டிப் பிழிந்து வாழ நினைக்கும் கும்பல்களே தமிழில் வைத்தியத் தொழிலை நடத்த முடியாதென்கின்றன சுயநலத்தால்! இதை மாற்றி, "கூலிக்காரன் மகனும் டாக்டராக வருவான் கொண்டுவா தமிழில் வைத்தியப்படிப்பை" என்கிறோம் நாம். தமிழில் வைத்தியக் கலை இருந்ததில்லை என்று சொல்லும் மத்திய ஆட்சியை அதட்டிக் கேட்கிறோம். "நீ அனுப்பிய தூதக்குழுவின் ஆராய்ச்சி சரியானதல்ல அனுப்பு வேறு தூதக்குழு" என்று. மாகாண ஆட்சிக்குச் சொல்லுகிறோம், "தமிழில் வைத்தியக் கல்லூரியை நடத்த, முடியாதென ஏமாற்றுகிறது படித்த பணக்காரக் கும்பல் ஏமாறாதே" என்று. இதை எதிர்க்கின்றன இங்குள்ள கட்சிகளும் கழகங்களும். இதைப் போன்றதே கட்டிடக்கலை (Engineering) கல்வியும்.

இஞ்சினீரிங் கல்வி தமிழில் போதித்தால் வராதாம்! இதுவும் பணம் படைத்த சுயநலக் கூட்டம் தங்களுக்கு போட்டி வராமல் இருக்கப்போட்டுக் கொண்டுள்ள வேலியே தவிர உண்மையல்ல. தமிழில் இஞ்சினீரிங் கல்வியென்றால், ஏழைக் கொத்தனாரும் அந்தக் கல்வியில் தேர்ச்சி பெற்று தொழில் நடத்த வந்துவிடலாமல்லவா? உழைக்காத—கருணை எக்கி, சேறு சமப்படுத்தி, கல்லை கையால் எடுத்து, அடுக்கிக் கட்டிடம் கட்டாத—வெறும் படிப்பை மட்டும் ஆதாரமாகக் கொண்டுள்ள—இஞ்சினீயர்களைவிட, கொத்தனாரே இஞ்சினீயரானால், தொழில் கொத்தனாருக்குத்தானே கிடைக்கும்? பகட்டாக—கருணை பிடிக்காமல், சேறுபடாமல்—பணம் சம்பாதிக்கும் கூட்டம் வாழமுடியாதல்லவா? ஆகையினால்தான் இஞ்சினீரிங் கல்வி தமிழில் வராதென்கிறார்கள். யோசித்துப் பாருங்

கள். கட்டிடக் கல்வி பெரும்பாலும் கணக்கில் அடங்கியது. அடுத்துள்ளது தொழில் நுணுக்கங்கள். இவற்றை தமிழில் போதித்தால் என் வராது? "6 × 4 = 24" என்பதை, "ஆறுநான்கு இருபத்தி நான்கென்றால் வராதா, அல்லது மறந்து போகுமா?" "இத்தனை உயரம் கட்டிடம் எழுப்ப வேண்டுமானால் இத்தனை அடி ஆழத்திலிருந்து ஆரம்பிக்க வேண்டும். இவ்வளவு உயரத்திற்கு இவ்வளவு கனம் தேவை. கலவை இன்ன முறையிலிருந்தால்தான் இவ்வளவு நாள் தாங்கும்" என்பவைபோன்றதையெல்லாம் தமிழில் சொல்லவா முடியாது? தமிழ் மட்டும் படித்த சிற்பிகள் கட்டிய கட்டிடத்தை பார்த்து மேலைநாட்டான் "இந்த இஞ்சினீரிங் முறை எங்களுக்கு இன்னமும் விளங்கவில்லை" என்று கூறி வியக்கிறார்களே! அதுமட்டுமல்ல "மதுரை திருமால் நாயக்கன் மஹால் போன்று, எந்த இஞ்சினீயராலும் கட்டமுடியா"தென்று அவர்களே சொல்லுகிறார்களே! அனுபவ ரீதியாகப் பார்த்தால்கூட நமது பழங்கால சிற்பிகள் கட்டிய கட்டிடங்கள், ஆயிரமாயிரம் ஆண்டுகளாகியும் அசையாதிருப்பதும், இன்றுள்ள மேலைநாட்டு முறைப்படி புதிய இஞ்சினீர்களால் கட்டுவிக்கப்படும் கட்டிடப், 'டார் டாரா'கத் தெரிப்பதும் கண்கூடாக இருக்கிறதே! திறமை வாய்ந்த அந்தத் தொழில்கள் நசித்தது என்? போலியாகவுள்ள இந்தத் தொழில்கள் வளர்ந்தது என்? உண்மைத் தொழில் தெரிந்தோர்களை கொத்தனார்கள் என்ற பெயரில் கூலிகளாக்கி, அனுபவ ரீதியாக தொழில் பயிலாதவர்களுக்கு இஞ்சினீயர்கள் என்ற பட்டத்தை வழங்கி, பணக்காரர் வீட்டுப் பிள்ளைகள் உழைக்காமல் பிழைக்கவும், திறமைசாலிகள் உழைத்துவிட்டு அவதிக்குள்ளாகி இருக்கவும்

செய்துள்ள இன்றைய நிலைக்கு கட்டிடக் கலைக் கல்லூரிப் படிப்புதானே காரணம்? இதைமாற்றி, கட்டிடக் கலைத்தொழிலை கருணை பிடிக்கும் ஏழைக் கொத்தனார்களுக்கே உரியதாக்கத்தான் "தமிழிலேயே இஞ்சினீரிங் காலேஜை நடத்து" என்கிறோம். 'கொத்தனார்கள் கூலிக்காரர்களாகவேதான் இருக்கவேண்டும், அவர்களுக்கு வாழ்க்கை வசதி கூடாது" என்று சொல்லும் பணமூட்டைகள் தான்—அவர்களின் பாதம்தாங்கிகள் தான்—ஆங்கிலத்திலேயே கட்டிடக் கலைத் தொழிற் கல்வியும் இருக்கவேண்டும் மாற்றக்கூடாதென்கிறார்கள். தமிழ் படித்த ஏழைக் கொத்தனார் வயிறு காய்ந்து சாக, ஆங்கிலம் படித்த பணக்காரன் மகன் "ஏய் கொத்தா!" என்று அதிகாரம் பண்ண—கட்டிடக் கலைத் தொழில் பணக்காரன் பரம்பரைக்கே சொந்தமாக இருக்க-தமிழில் போதிக்கக்கூடாதென்கிறார்கள். தமிழில் முடியாது வராது என்பதெல்லாம், ஏழையைவாழவிடாமல் பண்ணும் மார்க்கமே தவிர வேறு அல்ல. ஏழைகளுக்காக கண்ணீர் வடிக்கும் கட்சிகள் இதுபற்றி வாய் திறப்பதே இல்லை. நாம் சொல்லுவதை மறுப்பவர் உண்டானால் அவர்கள் சிந்திக்கட்டும். ஆங்கிலந்தான் தொழிற் கல்விகளுக்கேற்ற மொழி என்றானதின் பிறகு, இந்த நாட்டில் ஒரு தொழிலாளி மகன் பிறர் தயவில்லாமல் படித்து, டாக்டர்களாக—இஞ்சினீர்களாக—வக்கீல்களாக வந்ததுண்டா? இந்தக் கல்வியெல்லாம் பணக்காரன் வீட்டுப் பிள்ளைகளுக்குத் தானே குத்தகைக்கு விடப்பட்டிருக்கிறது? ஏழை நெசவாளி மகன் இஞ்சினீராக எங்கேயேனும் வந்திருக்கிறானா? கூலிக்குழுபவன் மகன் டாக்டரானதுண்டா? நாலுவீட்டுக்குத்துணி தோய்த்துக் கொடுத்து வயிறு வளர்க்கும் ஏழை வண்ணான் மகன் வக்கிலானதுண்டா? ஏன் ஆகமுடியவில்லை? பணம்

இல்லாக் காரணம்தானே? அதிகப் பணம் கொட்டிப் படிக்கவேண்டிய அன்னிய மொழியில், அக்கல்விகள் இருப்பதினால்தானே? இவைகளை மாற்றி தாய் மொழியிலே, தமிழிலே கொண்டு வந்தால் எத்தனையோ ஏழை வீட்டுப் பிள்ளைகள் அந்தக் கல்விகளைக் கற்று டாக்டர்களாக-இஞ்ஜினீர்களாக-வக்கீல்களாக வரமுடியுமே! எண்ணிப் பாருங்கள். ராயர்ட்கிளைவின் படிப்பு என்ன? இந்தியாவில் அவன் வகித்த பதவி என்ன? ஒரு தமிழனுக்கு—அதுவும் சுதந்திர நாட்டில்—அந்த வாழ்வு உண்டா? எனவே, "தமிழிற்கு வாழ்வளித்தால் தமிழினம் வாழும். தமிழிலேயே ஆட்சியை—கல்லூரிகளை-சட்டமன்றங்களை, நடத்துங்கள்" என்று தமிழரசுக் கழகம் குரல் கொடுக்கிறது. தமிழர்களின் உத்தியோகத்திற்கு ஆங்கிலம் நாதியாக இருக்கக்கூடாது. ஆகையினால் தமிழ்த் தாயை கொலுவிலேற்றி ஆங்கில நந்தியை அப்புறப்படுத்துங்கள் என்கிறது தமிழரசுக் கழகம். ஆங்கிலத்திலேயே தேர்வு முறைகளிருப்பதால், தமிழ் மட்டும் படிக்க திறமைசாலிகள்—நாணயஸ்தர்கள்-நல்லவர்கள் உத்தியோக உயர்வில்லாமல் ஒடுங்கிக்கிடக்க வேண்டியதிருக்கிறதென்பதை ஆட்சியாளருக்கு நினைவுபடுத்தி, தமிழில் ஆட்சி வேண்டும் என்கிறது. தமிழரசுக் கழகம். ஒரு போலீஸ் ஜவான்-வெறும் தமிழ் மட்டும் படித்தவன்-திறமை, நாணயம், கட்டுப்பாடு, துணிச்சல் ஆகிய சகல அம்சத்தாலும் சிறந்தவனாக இருந்தாலும், பதவியில் உயர்ந்து ஒரு ஜில்லா போலீஸ் அதிகாரியாக வர முடியுமா? முடியாதே! இவைகளில் எது இல்லாவிட்டாலும், ஆங்கிலப் படிப்பு மட்டுமிருந்தால் அதிகாரியாகிவிட முடிகிறதே! ஏன் இந்த நிலை? எடுத்ததற்கெல்லாம் ரஷ்யா சைனா போன்ற நாடுகளை உபமானம் காட்டிப் பேசுவோர்

களும் சிந்திக்கட்டும். அன்னிய மொழி—ஆங்கிலம்—படித்தால்தான் அங்கெல்லாம் உத்தியோக உயர்வு என்று இருக்கிறதா? இல்லையென்றால், ஆங்கிலம் படித்த இந்தியன் ஆங்கிலம் படிக்காத இந்தியர்களின் முதுகின் மீது சவாரி நடத்தும் கொடுமை இங்கே நடைபெறுவதை தடுக்க வேண்டாமா? தொழிற்சாலையில் கூலியாகச் சேர்ந்தவன்-தமிழிலே-தனது தாய் மொழியிலே புலவனாக இருந்தாலும்-காலமெலாம் உழைத்து உருக்குலைந்து வெளியேறும்போதும் கூலியாகத்தானே வருகிறான்? ஆங்கிலம் படித்தவன் குமாஸ்தாவாகச் சேர்ந்தால்-கூலியாகச் சேர்ந்தால்கூட-மானேஜராகிவிட முடிகிறதே! அனுபவமில்லாமல்—தொழிற் திறமை யில்லாமல்-அறைகுறை பேர்வழிகளெல்லாம் ஆங்கிலப் படிப்பால் உத்தியோக உயர்வும், ஊதிய உயர்வும், கௌரவமும், புகழும் பெறமுடிகிறதே! ஆங்கிலம் படிக்காத குற்றத்திற்காக தமிழ் நாட்டுத் தொழிலாளி, அல்லது போலீஸ்காரன்-அதனைப்போன்ற மற்ற தொழில்களில் ஈடுபட்டுள்ள கூட்டத்தார் அடிமை வாழ்வு வாழ வேண்டியதிருக்கிறதே! இதை மாற்ற முற்பட வேண்டாமா? இதற்கு ரெத்தப் புரட்சி தேவையில்லையே? அனைவரும் சேர்ந்து குரல் கொடுத்தால் ஆட்சி ஆம் என்று சொல்லத்தானேவேண்டும்? அரசியலைத்தான் எடுத்துக் கொள்ளுங்களேன். தொழிலாளர் பெயரால் நடைபெறும் கட்சியிலிருந்து சுயவாசிகளாக நாடாளும் கட்சிவரையில், எல்லாக் கட்சிகளிலும் ஆள்பவர்களும் அதிகாரம் பண்ணுபவர்களும் ஆங்கிலம் படித்த பட்டதாரிக் கூட்டமாகத்தானே இருக்கிறது? தவறி தாய் மொழி மட்டும் படித்த ஓரிருவர் வந்தாலும், ஆங்கிலம் கற்றோரின் தயவில்லாமல் கட்சியையோ ஆட்சியையோ நடத்தமுடியவில்லையே!

செருப்புத் தைக்கும் குடும்பத்தில் பிறந்த ஏழைத் தொழிலாளி, ரஷ்ய நாட்டுச் சர்வாதிகாரி ஸ்டாலின்! கொல்லன் உலைக்களத்தில் சம்மட்டி அடித்து வயிறு பிழைத்தவன், இத்தாலி நாட்டு சர்வாதிகாரி முசோலினி! வண்ணமடித்து வயிறு பிழைத்து வந்த கூலிக்கார ஹிட்லர், ஜெர்மானிய நாட்டுத் தலைவன், சர்வாதிகாரி! ஹோட்டலிலே பிளேட் கழுவிப் பிழைத்த சாதாரண தொழிலாளி இங்கிலாந்து தேசத்து மந்திரி பெவின்! சைனா நாட்டுத் தலைவனாக இருக்க சியாங் கேஷேக் ஆங்கிலம் அறியாதவன் அங்கெல்லாம் தாய் மொழி மட்டும் படித்தோர்களால், ஏழைகளால், கூலிகளால் நாடாள முடியும், முடிகிறது! காரணம் அங்கே தாய் மொழி ஆட்சி நடைபெறுகிறது. இங்கே? சகலமும் அன்னிய மொழியில் நடைபெறுவதால், பணக்காரன் வீட்டுப் பிள்ளைகளே நாடாளும் வாய்ப்பு-உரிமையல்ல-பெற்றவர்களாக விளங்குகிறார்கள், இது தொடர்ந்து நடைபெறவேண்டும் என்பதற்காகவே, "தமிழ் இப்போது ஆட்சி மொழியாக வர முடியாது, கூடாது" என்கிறார்கள். தமிழில் தொழிற் கல்வி கூடாதென்கிறார்கள். மொத்தமாகச் சொல்வதென்றால், ஆங்கிலேயனை அகற்றியதால் வந்த சுதந்திரம், கருப்புப் பணமுட்டைகளுக்கும், அவர்களின் மைந்தர்களான ஆங்கிலப்பட்டதாரிகளுக்குமே ஏகபோக உரிமையாக இருக்கவேண்டும், ஏழைகள் பங்கு கேட்கக்கூடாது! கேட்டாலும், கொடுத்தாலும், எடுத்து நடத்த-ஏற்றுக்கொள்ள, முடியாதபடி இருக்கவேண்டும் என்பதற்காகவே அன்னிய மொழியில்—ஆங்கிலத்தில்—ஆட்சி நடைபெறவேண்டுமென்கிறார்கள். தொழிற் கல்விகள், நீதி மன்றங்கள் ஆகிய சகலமும் ஆங்கிலத்திலேயே நடந்தாகவேண்டும் என்கிறார்கள். ஏட்டிலே

பாட்டிலே இருப்பதுமாறி உண்மையிலேயே நாம் இன்னாட்டு மன்னர்களாக திகழவேண்டுமானால், மொழிச் சமத்துவம் நமக்கு மிக மிக அவசியம். திறமையால்-உழைப்பால்-தியாகத் தன்மையால்-ஒருவன் உயர்ந்தவனாகவர வாய்ப்பிருக்கவேண்டுமே தவிர, அப்பன், பாட்டன் வைத்துவிட்டுப்போன சொத்தால், ஆங்கிலம் படித்துவிட்டு, அது ஒன்றையே தகுதி என வைத்து, அதிகாரிகளாக, ஆள்வோர்களாக வரும் மடமை பொசுக்கப்படவேண்டும். அன்னியன் அகன்றது மட்டும் போதாது அவன் மொழியும் அகலவேண்டும். அதன் பிறகுதான். பொருளாதாரச் சமத்துவ (சோஷலிச) வாழ்வை நிலைக்கச் செய்யவேண்டும். இல்லை என்றால், இன்று கிடைத்த சுதந்திரத்தை எப்படி பணக்காரக் கூட்டமும், படித்த கூட்டமும் தங்களுக்கே தனி உடமையாக்கிக்கொண்டிருக்கிறதோ, அப்படியே சோஷலிச வாழ்வின் பெயராலும் சுயநலக் கோட்டை கட்டி அவர்களை ஆள அதிகாரம் பண்ண தொடங்கி விடுவார்கள் ஆங்கிலப் படிப்பாளிகள்! ஏழைகளால் அதிலிருந்து மீள முடியாது, எனவே, அன்னியனை அகற்றி அதனால்வந்த சுதந்திரத்தை சமநிலைபடுத்த, மொழிவழி நாடுகளை உருவாக்கு என நாம் குரல் கொடுக்கிறோம் இதைத்தான் முற்போக்கு பேசுகிற கட்சிகளும் சொல்லியிருக்கவேண்டும். சொல்லவில்லை. காரணம் அங்கேயும் (ஆங்கிலம்) படித்த கூட்டத்தின் அதிகாரமே சட்டமாக இருப்பதுதான். இதைத் தொழிலாளி வர்க்கம் எண்ணிப் பார்க்க வேண்டும். தொழிலாளர் வர்க்கத்துக்கு தொழிலாளியே தலைவனாக இல்லை. இது கொத்தனார் தொழில் தெரியாதவன்—பழகாதவன்—இஞ்சினீராக வரும் விபத்தைப் போன்றதே! "பாட்டாளியே, உன்னை வாட்டுகிறேனே முதலாளி" என்று பாடு

படாதவன், பாடுபட்டு அறியாதவன், பள்ளியிலிருந்து நேராக வந்தவன் — மார்க்ஸிஸத்தை — சோஷலிசத்தை— ஏட்டிலே படித்துவிட்டு, "உன்னைப் பார், உன் உழைப்பைப் பார், உன்னை ஏய்க்கும் முதலாளியைப் பார்" என்று பேசுவதெல்லாம் போலி அரசியல்வாதிகளின் வீண் கூக்குரல்! இவர்களாலெல்லாம் ஏழைகளின் வாழ்வு மலர்ந்து விடாது! மலர்ந்ததாக உலக வரலாற்றிலும் இல்லை! பசித்தவனுக்கு பட்டினி கிடந்து அநுபவப்பட்டவனால் தான் உதவ முடியும் உதவமுடியாவிட்டாலும் அநுதாபமாவது காட்டமுடியும். நம்மிடம் வந்து படித்த கூட்டம், பாட்டாளிமக்களே என்று வாய்திறக்குமானால், அது ஒட்டு வாங்க, ஊரையாள, உண்டியல் நிறப்ப, சங்கம் வைத்துச் சதை வளர்க்க என்பதைத் தவிர உண்மையாக பாட்டாளிகளின் மீது ஏற்பட்ட பரிவாலல்ல. நாம் பெற்ற சுதந்திரமே இன்னும் நமக்காக (பாட்டாளிகளுக்காக) ஆக்கப்படவில்லை அதற்குள் அடுத்த பதார்த்தம் வரப்போகிறது அது மிக நன்றாக இருக்கும் என்கிறார்கள் எத்தர்கள். முதலில் வந்த பண்டம் எங்கள் இலைகளில் விழவில்லையே! அடுத்தபண்டம் முதல் பண்டம் உண்டவர்களுக்குத்தானே? எங்கள் கதி என்ன என்று கேட்கிறோம் ஏழைகளாகிய —ஏழைகளுக்காக ஏழைகளாலேயே நடத்தப்படுகிற தமிழரசுக் கழகவாதிகளாகிய நாங்கள். அனியாயக்காரன், அடுத்த பதார்த்தம் வருவதைத் தடுக்கிறான். மோசக்காரன் இவனைப் பந்தியை விட்டுத் துரத்து என்கிறார்கள் முதல் பதார்த்தத்தை முழுசாக உண்டு ஏப்பம்விட்டுக் கொண்டிருப்பவர்கள். இந்த விருந்தாளிகளிலே காங்கிரஸ், கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டு, தி. க., தி. மு. க., முஸ்லிம் லீக், இந்து மகா சபை, பார்வேர்டு பிளாக்,

பிரஜா கட்சி இன்னும் இந்த நாட்டில் எத்தனை கட்சிகள் உண்டோ அத்தனை கட்சி ஐயன்மார்களும் இருகிறார்கள். அவர்கள் ஆங்கிலம் படித்தவர்கள். சலவை உடைக்காரார்கள். அவர்களிடத்திலும் ஏழைகள் தொழிலாளிகள் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால், அவர்களின் கண்களை கட்சி திரையிட்டு மறைத்து விட்டிருக்கிறார்கள், அங்குள்ள ஆங்கில அறிவாளிக் கூட்டத்தினர். எனவே அந்தத் தொழிலாளிக் கூட்டமும் அவர்கள் கட்சித் தலைவர்களான வெள்ளை வேட்டிக்காரருடன் சேர்ந்துக் கொண்டு "அடுத்த பதார்த்தம் அடுத்த பதார்த்தம்-அதாவது சோஷலிச ஆட்சி! கம்யூனிச ஆட்சி! ஐந்தாண்டு திட்டம்! பத்தாண்டு திட்டம்"—என்று கத்துகிறார்கள். ஏழைத் தோழனே, ஏமாந்த தோழனே, ஏமாற்றப்பட்ட தோழனே, முதல் பதார்த்தம் (சுதந்திரம், அதனால் கிடைத்த சுகம்) உனக்கு வந்ததா? இல்லை என்றால், அங்கேயே நில்! அதிலேயே பங்கு கேள்! அடுத்த திட்டம் பிறகு. பரிமாறுபவனைக் கேள், "முதல் பதார்த்தம் எங்கே" என்று. அதன் முடிவை அவன் தெரிவிக்கும்வரை கூப்பாட்டை நிறுத்தாதே! 'பந்தியின் முதல் வரிசையிலிருப்பவர்களுக்கே அது சரியாகிவிட்ட' தென்கிறானா? அப்படியானால் அடுத்த பதார்த்தமும் அவர்களுடன் முடிந்துவிடாதிருக்க பந்தியைவிட்டு அவர்களை எழுந்திருக்கச் சொல்! இல்லை என்றால் பரிசாரகனை அழைத்து, 'எங்கள் வரிசையிலிருந்து பரிமாறு" என்று எடுத்துச் சொல்! இதைத்தான் தமிழரசுக் கழகம் சொல்லுகிறது. இதனால்தான் படித்த கூட்டங்களும், பணக்காரக் கூட்டங்களும், பாராளும் கூட்டங்களும் தமிழரசுக் கழகத்தினரை ஏசுகிறா

கள். "ஏமாற்றிப் பிழைப்பதற்கு வழியில்லாமல் செய்கிறார்களே பாவிகள்" என்று பேசுகிறார்கள், ஆனால், ஏழைகள், ஏமாற்றப்படுபவர்கள் உணருகிறார்கள். உணர்ந்து திருந்தி வருகிறார்கள். தமிழரசுக் கழகத்தின் வளர்ச்சியே இதற்குச் சான்று! உண்மையாக தொழிலாளர் வர்க்கம் சுகப்பட வேண்டுமானால் அதற்கு தமிழரசுக் கழகம் வகுத்துள்ள திட்டம்தான் சரியானது. தொழிலாளருக்காக தொழிலாளர்களால் வகுக்கப்பட்ட திட்டங்களே தமிழரசுக் கழகம் சொல்லுவது. மற்ற கட்சிகளின் கழகங்களின் திட்டங்களெல்லாம் தொழிலாளர்வர்க்கத்திற்கென்று மற்ற வர்க்கத்தினர்—பணக்காரர், பங்களாவாசியினர், படித்த கூட்டத்தினர்—வகுத்ததாகும்.

"நந்தா உனக்கில்லையாடா தரிசனம்" என்று அன்று ஜாதி வெறியன் பேசினான். "தமிழா உனக்கில்லையாடா சுகவாழ்வு" என்று இன்று ஆதிக்கவெறிபிடித்தவர்கள் பேசுகிறார்கள். அன்று அவன் ஜாதி வெறியால் உரிமையைத் தட்டிப் பறித்தான். இன்று இவர்கள் அன்னிய மொழியின் பெயரால் அடக்கி ஆளமுயல்கிறார்கள். எதிர்த்துக் கேட்டால தேசத் துரோகி என்றும், இந்திய ஐக்கிய விரோதி என்றும் கூறுகிறார்கள். உண்மையிலேயே இந்திய ஐக்கியத்தைச் சிதைப்பவர்கள் அடித்தளத்தில் உள்ள மக்களை ஊமைகளாக வைத்திருக்க முயல்பவர்கள்தான். உண்மையில் தேச விரோதிகள் என்பவர்கள், தாய்மொழியைக் கொல்பவர்கள்தான். அன்னிய நாட்டுத் தொடர்புடைய கட்சிகளும், அன்னிய நாட்டு மதங்களும் சொந்த நாட்டின் தேசபபற்றைக் குறைக்கும் என்றால், அன்னிய மொழிக் கல்வி என் தாய் நாட்டின்—தன் தேசத்தின்—பற்றைச் சிதைக்காது? எண்ணிப் பார்க்கவேண்டும்;

ஒரே பலகையில் செய்த வண்டிக் காலைவிட பல துண்டுக ளால் செய்யப்பட்ட வண்டிக் கால்தான் பலமுடையது. "துண்டு துண்டாக இருக்கக்கூடாது ஒரே பலகையாக இருக்கவேண்டும்" என்று கூறுபவன் தன்னை அறியாம லேயே வண்டியைச் சிதைப்பவனாகிறான். பல துண்டுகளைக் கொண்டு கால் செய்ய எண்ணுபவன் மிகக் கனமான பாரத்தையும் சுமக்கும்படியாக வண்டியை வலுவுடைய தாகச் செய்கிறான். ஆனால், துண்டுகள், துண்டுகளாகவே இல்லாமல் ஒரு பலமான மத்தியத்தில் இணையவேண்டும். இல்லையெனில் பலமிராது. இதை ஆட்சிக்கும் ஒப்பிட லாம். இந்தியா ஒரே நாடாக—எவ்விதப் பிரிவுமின்றி —இருக்க வேண்டும் என விரும்புபவர்கள் ஒரே பலகை யில் வண்டிக்கால் இருக்கட்டும் என்னும் கோஷ்டியினர். துண்டித்தநாடு கேட்பவர்கள், துண்டுகள், துண்டுகளாகவே -எதிலும் இணையாமல்-இருக்கவேண்டும் என்றுகூறி, எதற் கும் பயனில்லாமல் செய்பவர்கள். பல துண்டுகள் ஆரக் கால்களாகவும் 'வட்டாரக்களாகவும் இயங்கி, ஒரு தொகுப் பாகி, வண்டிக்காலின் மத்தியிலுள்ள 'குடம்' என்றும் பகுதியுடன் இணைவதுதான் சிறந்தது என்று கூறும் குழுவைப்போன்றதே தமிழரசுக் கழகம். இந்திய ராஜ்யங் கள் தனிச் தனிச் சுதந்திர நாடாகி, தேச நலத்திறகாக —மத்திய ஆட்சியில் இணைந்து நின்று—தங்கள் தாயகம் மட்டுமல்ல ; அகில இந்தியாவும் வாழவேண்டும் என்ற அகண்ட கொள்கையைக் கொண்டவர்களே தமிழரசுக் கழ கத்தினர். இதை மறுப்பவர்கள் தங்களை அறியாமலே தேசத்தின் பொது ஐக்கியத்தைக் குலைக்கிறார்கள்.

"தமிழில் தொழிற் கல்வி போதிக்கப்படவேண்டும், தமி ழிலேயே ஆட்சி நடைபெற வேண்டும்" என்று நாம் கூறுவ

தெல்லாம் உண்மையான பாட்டாளி வர்க்கத்தின் ஆட்சி ஓங்க வேண்டும் என்பதற்காகத்தான். "ஆங்கிலத்தைக் கை விட்டால் கல்வி அழிந்துவிடும் அரசியல்முறை தவறிவிடும்" என்ற கூக்குரல் சுகவாசிகளின் சொந்த நலன்கள் கெடா திருக்க எழுவதேயாகும். 'தமிழில் சகலமும் என்றால், சக லரும் சமம் என்ற நிலைவந்து விடுமே தங்கள் வாழ்வு— உழைக்காமல் பெறுகிற உல்லாச நிலை—தகர்ந்து விடுமே' என்ற பயத்தால் பணக்காரர்களின் மூளையில் உதிக்கும் சூட்சிவாதமே தமிழாட்சியையும் தமிழரசையும் எதிர்ப்பது. இதைத் தவிர நியாய வழியில் தாய் மொழி ஆட்சியை— தமிழகத்தில் தமிழ் மொழி ஆட்சி மொழியாவதை—தடுக்க எந்தவித முகாந்திரமும் கிடையாது! தமிழகத்தில் ஒரு கன் னடஜில்லாவும், ஒரு மலையாள ஜில்லாவும் இருப்பதை சாக் காகவைத்துக்கொண்டு, இது தமிழர்மட்டும் வாழும்நாடல்ல கன்னட—மலைஞால இனத்தவர்களையும் உள்ளடக்கிய நாடு. ஆகவே, தமிழ் ஆட்சி வரக்கூடாதென்ற கூப்பாடும், எந் தெந்தக் காரணங்களைக் காட்டி தாய் மொழி ஆட்சி வருவ தைத் தடை செய்யமுடியுமோ அந்த வகைகள் அனைத்தை யும் கையாண்டு பார்ப்பதென்ற முதலாளித்வ பிற்போக்கு புத்தியேயன்றி வேறல்ல! உண்மையிலேயே இன்று தொழி லாளர்களுக்கு—அவர்களின் முன்னேற்றத்திற்கு—முட்டுக் கட்டையாக இருப்பது முதலாளிகள் என்பதைவிட—அவர் களுக்குச் சாய்காலாக இருக்கும் அன்னிய ஆங்கில மொழி தான். உண்மையிலேயே தொழிலாளி வர்க்கத்தினர் உயர வேண்டும் என்று கருதுவோர்கள்—தொழிலாளருக்குச் சுக வாழ்வு தேடுவதாகச்சொல்லுபவர்கள்—முதலில் தொழிலா ளரின் வீட்டு மொழியை ஆட்சி மொழியாக்கப் பாடுபட வேண்டும். அப்பொழுதுதான் தொழிலாளர் வர்க்கம்

சுகப்பட முடியும். நல்ல விளைச்சலைக் காண விரும்பும் விவசாயி முதலில் நிலத்தை நன்கு பண்படுத்துவதுபோல, நல்லாட்சியை—நாட்டு மக்களின் உண்மையான ஆட்சியை —காண விரும்புவோர் முதலில் மக்கள் பேசும் மொழியில் ஆட்சி நடைபெறச் செய்தே ஆக வேண்டும். கண்களைக் கட்டிவிட்டு கையில் திருக்குறளைக் கொடுத்துப் பயனில்லை. ஆளுவது ஆங்கிலமாக இருக்கும்போது தமிழில் வல்லுனன் என்ற பட்டம் வழங்கிப் பயன்? சத்கதா காலட்சேபத்திற்கே கன்னித் தமிழ் பயன்பட்டுக்கொண்டிருக்கும் வரையில் தமிழ் வளராது. தமிழ் வளராத வரையில் தமிழகம் செழிக்காது. தமிழகம் செழிக்காத வரையில், தமிழகத்தின் மக்கள்—தொழிலினம்-உயர முடியாது. எனவே, தமிழ் வாழ எண்ணுவோரும், தமிழகம் வாழ நினைப்போரும், தாழ்ந்த நிலையிலுள்ள தமிழர்கள் உயர்ந்த நிலைபெற்று உன்னத வாழ்வு பெறவேண்டும் என அவாவுவோரும் ஆட்சிமொழி தமிழாக வேண்டும் என உச்சக் குரல்கொடுக்க வேண்டும். எல்லைகளைக் காக்க ஒன்றுகூட வேண்டும். தமிழகத்தின் எல்லைகள் காக்கப்பட்டு, தமிழிலே ஆட்சி அமைத்து, எஞ்சிய சென்னை ஒழிந்து, தமிழ் ராஜ்யம் மலர்ந்த பின்புதான் தமிழர்களுக்கு கட்சி அரசியல்! அதுவரை தமிழர்கள் இன உரிமை முழக்கத்தையே அரசியல் என்று கொள்ள வேண்டும். இதில் ஆண், பெண், இளைஞர், முதியோர், ஜாதி, மதம், முதலாளி, தொழிலாளி என்ற பேச்சுக்கு இடமில்லை. அனைவரும் தமிழர்களே! தமிழர்களுக்கு வேண்டியது தமிழாட்சி, தமிழரசு! அஸ்திவாரம் இல்லாமல் வீடு கட்ட முனையக்கூடாது! அது போல தொழிலாளர் மொழியில் ஆட்சி இல்லாமல் தொழிலாளர் ஆட்சி கோர முடியாது, கூடாது! எனவே, தமி

றாட்சியையும், தமிழர் உயர்வையும், தமிழகத்தின் மேன்மையையும் விரும்பும் எல்லாத் தமிழர்களும்—கட்சி, ஜாதி, மத பேதங்களை மறந்து—தமிழரசு காண பாடுபடவேண்டும்? அதற்கான ஒரே வழிதமிழரசுக் கழகத்தில் அங்கத்தினராகச் சேர்வதுதான்.

தமிழரசுக் கழகம் மத எதிர்ப்பு ஸ்தாபனமல்ல. ஆனால், அது மதவளர்ச்சி ஸ்தாபனமும் அல்ல. மதவாதியாக இருப்பதும் மத மற்றவனாக இருப்பதும் மனிதனின் தனி உரிமை. தனி உரிமைகளைப் பறிக்கும் பணியில் ஜன நாயகத்தை நம்பும் எந்த ஒரு இயக்கமும் ஈடுபட நியாயமில்லை. தன் கருத்தை எழுத்து மூலமாகவும், பேச்சு மூலமாகவும் எடுத்துச்சொல்ல எல்லா மனிதருக்கும் உரிமையுண்டு. ஆனால், தனக்குப் பிடிக்கவில்லை என்பதற்காக பிறர் மனம் நோகும்படி பேசி, எழுதி செயல் புரிவது தப்பாகும். இதை உணராத சில கழகங்கள் நமது நாட்டிலே இருப்பதை நாம் காண்கிறோம். ஆனால், தமிழரசுக் கழகம் அந்த வழிகளிலெல்லாம் ஈடுபடும் ஸ்தாபனமல்ல. அது ஒரு காலச்சார ஸ்தாபனம். தமிழர்களின் பொது நலன்களை—பொதுக் கலாசாரங்களை காப்பாற்றும் பணியில் ஈடுபடுவதை முதல் வேலையாகக் கொண்டியங்கும் ஒரு தேசிய ஸ்தாபனமே. ஆதலால், தனி மனிதன் பேசும் மொழியையும் அவன் மதத்தையும்பற்றி விவாதிப்பதிலேயே தன் வாழ் நாளை வீணேகழிக்க தமிழரசுக் கழகம் விரும்பவில்லை. தமிழ் நாடு தன் தாய் நாடு, தமிழ் என் தாய் நாட்டு மொழி, என்பதை ஒப்புக்கொண்டு தமிழகத்திலேயே நிரந்தரக் குடிகளாக நிலைத்துவிட்ட அனைவரையும் தமிழராக ஏற்று அவர்கள் அனைவரும் சுகவாழ்வுபெற தமிழரசு—உள் நிர்வாகத்தில் மத்திய ஆட்சியின் வீண்தலையீடுகளற்ற ஆட்சி—ஏற்படபாடு

படுவதும் மற்றவர்களேயும் பாடுபடும்படி அழைப்பதுமே தமிழரசுக் கழகத்தின் ஆக்கவேலைத் திட்டங்களில் அடங்கி இருப்பது. மதத்தால் கட்சியால், ஜாதிகளால் பல பிரிவு களாகி நான் தமிழனென்ற உணர்வற்றுப் போய் விட்டோர் களிடமெல்லாம் சென்று நீ தமிழன், உன் நாடு தமிழ் நாடு, உன் தாய் மொழி தமிழ் அதை அரியாசன மேற்றுவோம் வாருங்களென அழைக்கும்பணிகளே இடைவிடாது தமிழர சுக் கழகத் தொண்டர்கள் செய்து வருகிறார்கள். இந்தப் பணியினால் மத வெறி போய், மதநெறி வளர்வதைக் காண்கி றோம. இந்து இளைஞனும், இஸ்லாமிய இளைஞனும் கிருஸ் துவ இளைஞனும் இணைந்துநின்று என் தாய்நாடு தமிழ்நாடு, என் தாய் மொழி தமிழ் மொழி அதைக் காப்பதே எமது லட்சியம் என முழக்கமிடுவதைக் காண்கிறோம். கண்டுபூரிப் படைகிறோம்!" இன ஒற்றுமை வளர வளர, ஜாதி, மதபிரிவு கள் தானே அகன்றுவிடும" என்று தலைவர் ம. பொ. சி. அவர்கள் போதித்தது மெய்யாகி வருவதைக்கண்டு ஆனந்தப்படுகிறோம. தமிழகம் சோஷலிச தாயகமாக மாறு வதற்கான முதல் சிகிச்சை இன ஒற்றுமையை வளர்ப்பது தான் என்பதைப் புரிந்தே தலைவர் ம. பொ. சி. அவர்கள் தனது தொண்டர்களே இன ஒற்றுமையை பரப்பும்படி ஏவிவிட்டார். அதில் இன்று தமிழரசுக் கழ கம் முழுமூச்சுடன் ஈடுபட்டு முன்னேறியும் வருகிறது. உணவு, பசியை ஓட்டுவதுபோல, இன உணர்வு, தாயகத்தின் தாழ்ந்த நிலையை மாற்றுகிறது! ஆகவே, அடிமை, மிடிமை, அவல நிலை ஆகிய அனைத்தையும் போகக, தமிழ் சோஷலிசகுடியரசு என்று குரல் கொடுக்கிறது தமிழரசுக் கழகம். இதை உணரும் மதியற்றோரே நம்மை எதிர்க் கிறார்கள். இன்று தமிழரசுக் கழகத்தின் கொள்கைகளை

மறுக்கலாம் அல்லது அலட்சியப்படுத்தலாம். ஆனால் தமிழகம் உய்ய தமிழரசுக் கழகம் வகுத்துள்ள திட்டங்களைக் கடந்து சென்று வெற்றி கண்டுவிட எண்ணுவது பகற் கனவாகவே முடியும். இதைக் கட்சி அரசியல் பேசுவோர் கவனிக்க வேண்டும். தமிழரசுக் கழகம் என்றுமே கட்சி அரசியலில் புகுந்துவிடாதிருக்கவேண்டுமேயானால் அதன் கொள்கைகளை எல்லாக் கட்சிகளும் ஒப்புக்கொண்டு, தனித்தனியே செயல்படுத்த எண்ணாமல் தமிழரசுக் கழகத்தின் கீழ்நின்று பணிபுரிய முன்வரவேண்டும். அப்படி வருவதுதான் தமிழக வாழ்விற்கு நல்லது. இதை உதாசீனப்படுத்திவிட்டு தனித்தனி முகாம்கள் அமைத்து வேலை செய்வதால் பலன் எதுவும் கிட்டப்போவதில்லை. ஆகவே தமிழ் ஆர்வம்கொண்ட பெரியோர்களை, தமிழகம் வாழ எண்ணும் நல்லோர்களை தமிழின் பெயரால் வருந்தி வேண்டி அழைக்கிறோம். வாருங்கள் தமிழரசுக்கழகத்திற்கு சேருங்கள் அங்கத்தினராக! சேர்ந்து பணிபுரிவோம் நமது தாயகத்திற்கு. அதன் வாழ்வே நமது வாழ்வு! அதன் வளர்ச்சியே நமது வளர்ச்சி! இவற்றை நாட்டு மக்களுக்கு நல்ல முறையில் பறைசாற்றவே தமிழரசுக் கழகம் வந்தது. இந்தப் பணிகளில் ஈடுபடவேண்டும் என்றே எல்லாத் தமிழர்களுக்கும் அது சொல்லுகிறது. வாழ்க தமிழ். வருக தமிழரசு. அமைப்போம் சோஷலிச தமிழ்க் குடியரசு!

வணக்கம்.